# 13
# கடைசிக்கட்டி மாம்பழம்

**து**வைக்கல்லில் உட்கார்ந்திருந்த தர்மம் தன் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு, தன் முழங்கால்களுக்கிடையே முகத்தைப் புதைத்துக் கொண்டு, பட்டுப்பாவாடைக்கு வெளியே தெரிந்த கால்களின் பெருவிரல்களையும் கிளியின் அலகுபோல் இருந்த நகங்களையும் விரல்களால் பரிசோதித்தபடி சுகமாக அழுது கொண்டிருந்தாள். அழுவது தர்முவுக்கு ரொம்பப் பிடிக்கும். முணுக்கென்றால் அழ ஆரம்பித்து விடுவாள். யாரும் அவளைத் தடுக்க முடியாது. கிணற்றடிதான் அவளுக்கு அழுது கொட்ட ஏற்ற இடம். அம்மா உள்ளே பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தாள். சமையல் அறையின் பின் ஜன்னல் வழியாக அம்மாவின் பொருமலும், அடுப்புப் புகையும் ஒன்றாகவே வெளியேறிக் கொண்டிருந்தன.

''இப்ப முடியாதுங்கிறானாமே! முடியாதமல்ல? ஏன் முடியாதுங்குறான்? நம்ப பொண்ணு இருக்குற இருப்புல இருந்திருந்தா இப்டியெல்லாம் அவன் பேசுவானா? உம்முன்னா போதும் கையில் ஒரு பாவாடையைத் தூக்கிக்கிட்டு கொல்லக் கிணற்றடிக்குப் போய்டுவா. அப்றம் திரும்பி உள்ள கூப்ட்றதுக்குள்ள ப்ராணம் போய் ப்ராணம் வரும். நம்ப புள்ளைக்குத் துப்பு இல்லெ! நமக்கோ பொழைக்கத் துப்பு இல்லெ! ஆம்பளை இல்லாத வூட்ல எல்லாத்தையும் தலையில் ஏத்துக்கிட்டு பத்து வருஷமா இருந்து வடிக்கிறான். வாயைத் தொறந்து ஒண்ணும் கேட்க வேண்டியதில்லெ. எல்லாம் தானா நறுவுசா நடத்திப்புடுவான். அருமை அருமையா தாங்கி, தாயா புள்ளையா கூடவே காவலுக்கு நிப்பான். என் ஆயுசுக்கும் இப்டி ஒரு புள்ளையெப் பாத்ததுல்லெ. ஆம்பளையுள்ள இப்டி ஒரு பயலெ எவளுக்காவது கெடைக்குமா? நம்ப வூட்ல இருக்குற முண்டம் அதுக்கு நைச்சியமாய்ப் பேசத் தெரியிதா? பன்னண்டு வயசுலருந்து பழகறா, இன்னும் கூட வளைச்சுப் போடத் தெரியலே. நான் என்ன இழுத்துக்கிட்டு ஓடுடீன்னா சொல்றேன்? கல்யாணம் பண்ணிக்கத்தானே சொல்றேன்?'' பெரும்பாலும் அவனும் இங்கேதான் சாப்டுவான். அவனுக்கு வீடு நெல்லுமண்டிக்காரத் தெருவுல இருக்கு. பதினஞ்சு, பதினாறு வருஷத்துக்கு முந்தி மதுரம்பாள் புருஷன் வடிவேலு பட்டாளத்துல உயிர் விட்டப்போ குடும்பம் தெருவுக்கு வந்தது. பங்காளி யாரும் அண்டி வந்து பாக்கலெ. ஏன்னா? புள்ளமார் வீட்டுப் பொம்பளைய இழுத்து வச்சுக்கிட்டவன் வடிவேலு. கட்டிக்கிட்ட தாலியக் கூட சாதிசனம் எதுவும் மதிக்கலெ. நாப்பது வருஷத்துக்கு முந்தி பட்டாளத்துக்குப் போயி, பட்டாளத்தோடயே ஜீரணிச்சுப் போனாரு வடிவேலு. ஒவ்வொரு முறை லீவுக்கு வரும் போதும், ஒவ்வொரு புள்ளையா பெத்துடுவா மதுரம்பா.

புள்ளைங்க யாரும் அப்பாவோட நிரந்தரமா வாழ்ந்ததே இல்லெ. வரிசையா புள்ளக்குட்டி நிறைந்த வீட்ல மூத்தது பொம்பளப் புள்ளையா பொறக்கவே கூடாது. எல்லாத்துக்கும் தொக்காப் போய்டும். நாலஞ்சு தங்கச்சியோட தர்மு முதல் பொண்ணா படிச்சு கரையேறி பி.ஏ. பாஸ் பண்ணி, டைப், ஷார்ட்ஹாண்ட், புக்கீப்பிங் பாஸ் பண்ணி யுனிவர்சிட்டி அக்கவுண்ட்ஸ் செக்ஷனல்லெ பைனான்ஸ் ஆபீஸரா வேலைக்கு சேர்ந்து... அப்புறம் இடுப்பு ஒடிஞ்சு குடும்பம் ஏந்திரிக்க ஆரம்பிச்சுடுச்சு.

இரண்டாவது குட்டி லலிதா க்ராஃப்ட்ஸ்ல வேலையா இருக்குறா. ரூ. 1500 சம்பளம். அடுத்தது நாகலக்ஷ்மி போலீஸ் டிபார்ட்மெண்ட்டுல போலீஸா சேர்ந்து இருக்குறா.

அதற்கடுத்த பொண்ணு ஜோதி மெட்ராஸுல ஏதோ ஒரு புத்தகக் கம்பெனியில வேலெ பாக்குது.

ராஜலெக்ஷ்மி டெல்லி போயாச்சு. என்.எஸ்.ஐ சில டைரக்டர். அதுக்குக் கீழ் இன்னும் நாலு இருக்கு. ஒரே ஒரு ஆம்பளப் புள்ளெ பத்தாங்கிளாஸுல படிக்கிறான். அதுக்கும் முன்னால் இன்னும் மூணு பொண்ணு இருக்கு. எல்லாம் பள்ளிக்கூடத்துல, காலேஜுலன்னு படிக்கிதுவ.

குடும்பம் என்னவோ இன்னைக்கு வாழைத் தோப்பு மாதிரி பச்சுப் பச்சுன்னு பசுமையா வளர்ந்து எல்லார் கண்ணையும் கரிக்குது. மாசம் பொறுந்தா ரூ. 4,000 மணியார்டர் மட்டும் வருது. மணியார்டருக்கு இனாம் மட்டும் பத்து ரூபாய கொடுக்கிற வீடு மதுரம்பா வீடு மட்டும்தான். இதுவும் கூட தெருவு பூராவுக்கும் வயித்தெரிச்சல்தான். நாதன் இல்லாத குடும்பம்! 20 வருஷத்துக்கு முந்தி தெருவில நின்ன குடும்பம். வடிவேலு பட்டாளத்துல மண்டையெப் போட்டப்போ பங்காளி எல்லாம் கமுக்கமா சிரித்ததுவ. ''இவளக் கட்டிக்கிட்டு வந்தானே?! தஞ்சாவூர்ல பொண்ணு இல்லேன்னா? எல்லாம் கள்ளச்சிவ பொண்ணு எவளும் இல்லையா?'' அப்டின்னு மண்ணவாரித் தூத்துனதுவ.

நாளு கெழமைன்னு யாரு வூட்டுக்குப் போனாலும் முதுகு பின்னால 'ஹும்' ன்னு ஒரு கேலிச்சிரிப்பு! 'ஹல்' ன்னு ஒரு நக்கல்! கெழவிக கூட இவ கழுத்தையும், காதையும் உத்து உத்துப் பாக்கறது!

இப்டி எல்லாம் எவ்வளவு சகிச்சிருக்கா மதுரம்பா? அடேயப்பா! உலைவாயை மூடலாம்!

கலியராஜன் இந்த வூட்டுக்குள்ளப் பூந்தப்பக்கூட எவ்வளவு கேலி, எவ்வளவு கிண்டலு. கலியராஜனை மதுரம்பா 'வெச்சுருக்கா' அப்டின்னு பல ஊடுவல்ல எச பேசலெ? எவ மண்ணவாரித் தூத்தல?

கலியராஜன்கிட்டே ''நீ இந்த வூட்டுக்குள்ள வராதப்பா! ஆம்பளை இல்லாத வூடு, நாலு பேரு நாலும் பேசுவான். நாக்கில நரம்புல்லாதவளுவ எது வேணுன்னாலும் பேசுவாளுவ. இனிமே என் பொண்ணுவல்லாம் கரையேறணும். அதுவரைக்கும் எங்கவூட்டுக்கு வராதே! ஒங்கிட்டே கையை

நீட்டி எவ்வளவோ காசு வாங்கி இந்தக் குடும்பத்துக்குன்னு. அட நீ கொஞ்சமா செஞ்சிருக்கே? ஆனா இனிமேல் வேண்டாம். படிக்கிறதுக்குன்னு, பள்ளிக் கூடத்துக்குன்னு எவ்வளவு காசு யாருக்கும் தெரியாம கொண்டு வந்து கொடுத்திருக்கே? உங்கவோ, திங்கவோ மட்டுமா ஒறவு? வேண்டாம் தம்பி நீ எதையோ நெனச்சுக்கிட்டு இந்த வீடே கதின்னு அலையிறது நல்லதுல்லெப்பா, பத்துப் பொண்ணு பெத்தவ சொல்றேன். இந்தக் குடும்பம் பூராத்தையும் நீ தாங்கி சொமக்க முடியாதுப்பா! இனிமே இங்க வராதே? எனக்கே சகிக்கல!'' என்று கலியராஜனைப் பதினஞ்சு வருஷத்துக்கு முன்னாலேயே விரட்டு விரட்டுன்னு விரட்டினவதான் மதுரம்பாள். ஆனால் முடியல்லெ இப்ப?!

கலியராஜன் ஒரு முரட்டுப் பயல். பள்ளிக்கூடத்துல படிக்கிற காலத்துலேயே கலியராஜன் இந்த வீட்டுக்குள் வந்து நொழைஞ்சப்பவே அவனோட ஒறவு கொண்டாடுறதுல அந்த வீட்டுக் குட்டிகள் எல்லாத்துக்கும் ஒரே வேகம்தான். ஒரு பேங்க் ட்ராஃப்ட் மாத்துறப்போ தர்மு அவனே அவங்க அப்பா வடிவேலுக்கு சொந்தம்ன்னு கண்டுபுடிச்சா. பதினாறு, ஊரு ஒற மொறையில ஒறவு எங்கயாவது ஒட்டிக்கிட்டுத்தான் இருக்கும். கருகருவென்று சுருண்ட முடியும். பளிச்சென்ற பெரிய விழிகளும், அகன்ற புருவங்களும், பெரிய மாரும் முதுகுமாய் முறுக்கிய மீசையுடன் 'சொட்ட வாழக்குட்டி' என்பார்களே அது மாதிரி ஆள் கருக்கா இருப்பான். தர்மு அவனைக் காரணமில்லாமலே வீட்டுக்குக் கூப்பிட்டாள்.

''ஒரு தடவை அப்டியே வீட்டுக்கு வந்துட்டுப் போங்களேன்'' என்றாள். வீட்டுக்கு வந்ததும் இவன் ஏன் வந்தான் சும்மாதானே கூப்பிட்டோம். கூப்ட்ட ஒடனே வந்துட்டானே. அம்மா என்ன நெனைக்கும் தங்கச்சிவ எல்லோரும் என்ன பேசுவாங்க. அக்கம் பக்கத்துப் பொண்டுவ அப்டியே நட்டுக்கிட்டுப் பாக்குங்களே என்றெல்லாம் பயப்பட்டாலும், அவன் கண்களைப் பார்த்து அடங்கிப் போனாள்.

''எதுக்கு வந்திருக்கான்?'' என எண்ணமிட்டபடியே ''வாங்க உள்ள வாங்க ஏன் அங்கேயே நிக்கறீங்க?' என்றாள்.

''யாருடி இது?'' என்று கேட்டபடியே அடுத்தடுத்து தங்கைகளும் உள்ளேயிருந்து வந்து, நிலையைப் பிடித்துக் கொண்டு, அவனை முற்றுகை இட்டார்கள்.

''இவங்கள்லாம் ஒங்க தங்கச்சிங்களா?'' எனக் கேட்கும்போதே, ''யாரும்மா வந்திருக்கிறது?'' எனக் கேட்டுக் கொண்டே உள்ளேயிருந்து வந்த மதுரம்பாள், கலியராஜனைப் பார்த்து அசந்து போனாள். தினமும் சிங்கப்பெருமாள் குளத்தில் குளிக்கும்போது அவனைப் பார்க்கிறவள்தான் இவள். ஒரு பார்வையிலேயே பெண்கள் ஆம்பளைகளைக் கண்டுபிடித்து விடுவார்கள். கலியராஜனை மிக நன்றாகப் புரிந்தது மதுரம்பாளுக்குத்தான். அவனுடைய தோற்றமே வித்தியாசமாக இருந்தது அவளுக்கு. மதுரத்துக்கும் அவனுக்கும் 20 வயது வித்தியாசமிருந்தாலும், ஒரு ஆம்பளைய இன்னும்

திரும்பிப் பாக்க அவளுக்கு இருந்த திமிரைப் பற்றி அவளே வருத்தப்பட்டு, எட்டு நாள் விரதம் இருந்து, தண்ணீரோட அம்பாளுக்கு வேண்டுதல் செய்து விரதத்தை முடிச்சது இன்னும் ஞாபகமிருக்கு. கலியராஜன் யார்? என்ன செய்கிறான்?

ஏன் இங்கே வர்றான்? அப்டின்னல்லாம் கவலைப்பட வைத்து விட்டான். ஆனா கலியராஜன் வர்றதெ நிறுத்தவே இல்லெ. தஞ்சாவூர் பர்மனன்ட் பேங்க்ல கேஷியரா வேலை பாக்குறான். கை நிறைய சம்பளம் வாங்குறான். பி.ஏ.பி.எல். பாஸ் பண்ணியிருக்கான். ஏழெட்டு கம்பெனிக்கு அக்கவுண்டண்டாவும் லீகல் அட்வைசராகவும் இருக்கான்.

போதாது? ஒரு தாய்க்கு ஒரே புள்ளை. அக்குத்தொக்கு கிடையாது. அவங்க அப்பா நூறு வேலி ஜமீன்தாரா மன்னார்குடிக்குப் பக்கத்துல அரண்மனைக்காரன் தளம்தான் அவங்க ஊரு. என்னமோ தர்மு கிட்ட சொக்கிப் போய்ட்டானோ என்னமோ கலியராஜன். தூங்குறது மட்டும்தான் அவங்க வீட்ல. அப்றம் நாள் முச்சூடும் பேங்குக்கு வேலைக்குன்னு கழிஞ்சாலும் மீதி நேரம்லாம் இஞ்ச மதுரம்பா வீட்லதான்.

ஆரம்பத்துல யாரும் ஒட்டலைன்னாலும் தினமும் மூணு வேளையும் வந்து வீட்டுப் பொறுப்பை எல்லாம் தாந்தலையில எடுத்துப் போட்டுக்கிட்டு மாங்கு மாங்குன்னு எல்லா வேலையும் செய்ய ஆரம்பிச்சப்போ, மதுரம்பாளுக்கு மட்டுமில்ல, வீட்டுக்குள்ளற வரிசையா உக்காந்து, அடுக்கா கோபுரத்து பொம்மை மாதிரி சுருட்டைத் தலைமுடியோட தலைபின்னிக் கிட்டிருந்த ஒம்பது பொண்ணுங்களுக்கும்கூட வெட்கமாகவும், அருவருப்பாகவும் கூட இருந்தது. ''போ போ'' ன்னு சொல்லாதவைங்க அந்த வீட்ல யாரும் இல்லெ. மதுரம்பா வெளியே வர்றதையே நிறுத்திட்டா. ஆனாலும் கலியராஜன் வண்டியெ ஓட்ட ஆரம்பிச்சிட்டான்...

முன்னறையில் எப்பவும் கலியராஜன் உக்காந்து அந்த வீட்டுக்கு வேண்டிய ஏதாவது ஒரு காரியம் பத்தி நாகலட்சுமி கிட்டயோ, ஜோதிகிட்டயோ பேசிக்கிட்டு நிக்கிறதை அந்த வீட்டுக்குள்ளறயே கூட யாராலயும் தடுத்திட முடியலெ. தர்மு விலகி விலகி ஒதுங்கிப்போனா. ஆனா கலியராஜன் ராத்திரி 10 மணி வரைக்கும் பத்து வயசுக்குட்டி விஜயவோட விளையாடிக் கொண்டே தூக்கிக் கொஞ்சிக்கிட்டு இருக்கிறதைத் தடுக்க முடியல்லெ. அவனுடைய இருப்ப மாத்தி அவனை விரட்டி அடிக்கணும்ன்னு அந்தத் தெருவுல உள்ள ஒவ்வொரு ஆணும், பொண்ணும் ஆத்திரமா திட்டினாங்க. கோள் குண்டுமணி பேசுனதுவ எல்லா பொம்பளையும்.

பொம்பளைங்க வேலிக் காட்டாமணி ஓரமா நின்னு 'குசு குசு' ன்னு விஷயமா பேசினாங்க. ஆனா கலியராஜன் வரும்போது எல்லாரும் சடக்குன்னு மரியாதையா சிரிச்சாங்க. கலியராஜனும் அந்தத் தெருவிலிருக்கிற வூட்டுக்கல்லாம் சாதாரணமாப் போய் நின்னு,

''என்னத்தை? எப்படி இருக்கீங்க? மாமா எப்டி இருக்காங்க? என்னா கொழம்பு வச்சிருக்கீங்க? சாப்ட வரலாமா? ஒங்க கலருக்கு நீலப்பொடவை

நல்லாயில்ல, மல்லியப்பூ வக்யாதீங்க, கதம்பமும், ரோஜாப்பூவும்தான் ஒங்களுக்கு லாயக்கு'' என்றெல்லாம் பேசும்போது அந்தப் பெண்கள் அவனுடைய களங்கம் இல்லாத விழிகளில் கலந்து போனார்கள்.

''வாப்பா! ஏதோ ஏழைக்கேத்த எள்ளுருண்டை இருக்கு! சாப்புடேன்?'' அப்டீம்பாங்க.

தர்முவெக் கேட்கமாலேயே அவளுக்கு காலேஜ் ஃபீஸ் கட்டினான் கலியராஜன். அவள் ஆத்திரமாக, கோபமாகக் கத்தியபோதெல்லாம் கோபப்படாமல் அவளுக்கு வேண்டிய துணையாக நின்றான். கூடவே போய் லஞ்சம் கொடுத்தான். வேலை வாங்கித் தந்தான்.

ராஜலெட்சுமியை வேலையில் சேர்த்துவிட்டதும் அவன்தான். மதுராம்பாள் திட்டத்திட்ட அரிசி மூட்டைகளையும், உளுந்து, மிளகாய் பாரங்களையும் கொண்டு வந்து இறக்கினான். ஊரார் கண்களை எண்ணி லலிதா அழுதபோது, அவளைக் கொண்டு போய் பெரிய உத்யோகம் செய்வித்தான். கொல்லைப் பக்கம் இருந்த வேலியையெல்லாம் பிடுங்கி எறிந்துவிட்டு யாரைப் பற்றியும் கவலைப்படாமல் சிமெண்டில் சுத்து மதில் சுவர் வைத்து கோட்டைபோல் மூடினான். கிணறு தூறு எடுத்து அதில் ஒரு மோட்டார் ஃபிட்டப் பண்ணியபோது மதுரம்பாள் நடுங்கிப் போனாள்.

''என்ன எளவுக்குடா இது? பகவானே ஊரு வாயி எல்லாம் பூந்து பொறப்புட வைக்கிறானே! இந்தப் பய? நாசமத்துப் போவ! கேட்கிறவளுங்களுக்கெல்லாம் பதில் சொல்லி மாளலையே! என்னத்துக்கு இதெல்லாம் செய்யிறான்? எப்படி திருப்பிக் குடுக்க? கடன்காரியாவே சாவணுமா? யாரு கூப்ட்டா இவன? ஏன் வந்து தாலியறுக்கிறான்?'' என்று சமையல்கட்டுக்குள் துமுறடியா பொலம்பிக்கிட்டே இருக்கும் மதுரம்பா!

மதுரம்பா ஒரு பக்கம் கத்திக்கிட்டு இருக்கும்போது, இன்னொரு பக்கம் தர்மாம்பா அமைதியா தனியா கலியராஜன்கிட்ட கேப்பா:

''ஏங்க ஒங்களுக்கு இந்தத் தும்பம்? என்னத்துக்கு எங்களக் கட்டிக்கிட்டு இப்டி அழுவுணும்? நல்லாப் படிச்சிருக்கீங்க. நிறைய சொத்துக்கு ஒரே புள்ள நீங்க. என்னத்துக்கு எங்கள கடனாளி யாக்குறீங்க? நீங்க ஒதவி செய்றீங்க, நாங்க வாங்கிக்கிறோம். மானம் போற மாதிரி அம்மா பேசுது. அக்கம் பக்கம்ல்லாம் ஏற்கனவே என்னென்ன அசிங்கமெல்லாம் பேச முடியுமோ பேசறாங்க. அவ அவ வூட்டுல ஆயிரம் கோளாறு இருந்தாலும் வெளிய எல்லாம் ஒரே சுத்தபத்தமா பேச்சு மட்டும் நறுக்கா, கருக்கா கெளம்பும். வேண்டாங்க அன்னைக்கி இந்தக்கார வூட்டுக்காரரு நான் போகும்போதே, ''என்னம்மா எப்ப கல்யாணம் பண்ணிக்கப்போறே? கலியராஜன் என்ன சொல்றான்?'' அப்படிங்கிறாரு,''. ''இதெல்லாம் நடக்கிற காரியமா?'' அப்டின்னு நானும் சிரிச்சுக்கிட்டே வந்துட்டேன். பத்து வருஷமா இதே கதையாதான் இருக்கு. ராத்திரில அம்மா சொல்லிக்கிட்டு அழுவுது. ''அவனெ திட்டித் தொரத்தனும்ன்னுதாண்டீ ஒவ்வொரு நாளும் நெனைக்கிறேன். ஆனா காலையிலேயே காய்கறி சாக்கு ஒண்ணத் தூக்கிக்கிட்டு அழையாத வீட்டுல

நொழையிற விருந்தாளியா வந்து படியேறும்போது உள்ள வராதடான்னு எப்டிச் சொல்றது? ஒங்கப்பன் போற போக்குல இவன்ட்ட மாட்டிவுட்டுப் போய்ட்டான்'' ங்குறாங்க. எனக்கும் ஒங்களப் பாக்குறப்பல்லாம் மனசுக்குள் என்னமோ முணுமுணுங்கும். இப்பகூட இதெல்லாம் உங்கிட்ட பேசுறதுல அர்த்தம் இல்லைன்னுதான் தோணுது. ஆனால் என்னமோ பயமாயிருக்கு! ஒங்களுக்கு தெரியுமோ தெரியாதோ! ஒங்க பேரைக் கேட்கும் போதெல்லாம் என்னமோ ஒரு திகில்! பெரிய ஆட்டுப்புள்ள நீங்க! எது செஞ்சாலும் சரியாத்தான் இருக்கும். நாளைக்கு நீங்க எப்டி இருந்தாலும் எல்லாரும் நீங்க செய்யிறது எல்லாம் சரிம்பாங்க. ஆனா இந்தப் பதனஞ்சு வருஷமா எல்லா கெட்ட பேரையும் நாங்க வாங்கிக்கிட்டாக் கூட உங்கள கெடுத்துப்புட்டோம்ன்ற ஒரே ஒரு கெட்ட பேரை மட்டும் நாங்க யாருகிட்டேயிருந்தும் வாங்கக் கூடாது'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே தர்முவின் மார்புகள் விம்மி அடங்கின. கண்கள் சிவந்து பொலபொல என்று கண்ணீரைக் கொட்டின. மூக்கு நுனி சிவந்து புருவக்கொடிகள் பாம்புகளாய் நெருங்கின. வாயைத் திறந்து விம்மியபோது, நெஞ்சின் சூடு ஆவியில் பொரிந்தது.

அவளையே ஏறிட்டுப் பார்த்தபடி கலியராஜன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தபடி அந்தப் பேச்சையெல்லாம் கேட்காதது போல ஒரு முகபாவத்துடன் அவர்கள் இருவரையும் கடந்துபோன சுநந்தாவின் கண்களும் சிவந்து கண்ணீர் கரை கட்டியிருந்தது.

''என்ன தர்மு நீட்டமா லெக்சர் அடிக்கிறே? ஒங்க வீட்ல எது பேசணும்ன்னாலும் யாராவது ஒருத்திகிட்ட பேசுனா போதுமே. சின்னக் குட்டி விஜயாகிட்ட பத்து வருஷத்துக்கு முன்னாடியே இதுக்கெல்லாம் பதில் சொல்லியிருக்கேனே? நான் விஜயா வெத்தான்டீ கட்டிக்குவேன் போதாதா?''

உள்ளேயிருந்து அதற்கு பதில் வந்தது. விஜயாதான் பதில் சொன்னாள் கணீரென்று.

''அதையாவது சீக்கிரம் செஞ்சு தொலைங்களேன் மாமா. நானும் கெஞ்சிக்கிட்டேதானே இருக்கேன்'' அப்போது-

''நிச்சயமா பண்ணிக்கிறேன்டீ! இன்னொரு பத்து வருஷம் ஆகட்டுமே? எல்லாரும் கரையேறிட்டா நீயும் நானும் ராமேஸ்வரம் போயிறலாம் பாரு! அங்கேயிருந்து காசிக்குப் போனா ஒரேயடியா தலை முழுகிறலாம்!'' என்று சொல்லி கலகலவென்று சிரித்தான் கலியராஜன்.

சட்டையை அவிழ்த்து கொடியில் போட்டுவிட்டு, முற்றத்தில இறங்கி வழக்கம்போல் குழாயைத் திறந்துவிட்டு இடுப்புத் துண்டோடு குளிக்க ஆரம்பிச்சான். பைப்பிலிருந்து அருவி மாதிரி தண்ணீர் கொட்டியது. தண்ணீரில் ஒரு சின்ன கோயில்சிலை அபிஷேகம் ஆவது போல் இருந்தது சுநந்தாவுக்கு. உள்ளேயிருந்தது அவன் கேட்குமுன்னே சோப்புப் பெட்டியைக் கொண்டு வந்து நீட்டினாள் சுநந்தா. அதை வாங்கிக் கொண்டு நுரையில் புகுந்தான் கலியராஜன். சுற்றிலும் சுநந்தாவோடு ராஜலக்ஷ்மி எல்லாரும்!

தர்மாம்பாவுக்கு ஆத்திரமாக வந்தது. ''என்ன சுவாதீனம் இந்த தடியன் கலியராஜனுக்கு? யாருக்கும் அடங்காத திமிரு? நான் என்னடீ கேக்குறது அப்டீன்னு. ஆம்பளை இல்லாத வீட்ல ரொம்ப நாளைக்கு முன்னாடி பூந்து, அதிலேயே லயிச்சுப் போய்ட்டான். பேங்கு நேரம் போக மத்த நேரம்ல்லாம் இங்கயேதான் இருப்பான். ஒரு ஆம்பளைன்னா வேற வேலையா இருக்காதா? திடீர்ன்னு முத்தத்துல கட்டிலெ இழுத்துப் போட்டுப் படுத்துக்கிட்டு தூங்கிக் கிட்டு இருப்பான்! எப்பவாச்சும் சுத்தமா சட்டை வேட்டி எல்லாத்தையும் கழட்டி எறிஞ்சுட்டு நெய் பூசின சிலை மாதிரி ஒடம்பு பூரா எண்ணெயைப் பூசிக்கிட்டு வெய்யில்லெ என்னமோ அவுங்க வூட்டுல உக்காந்துருங்க மாதிரி சுத்தமா, சுவாதீனமா அங்கேயே உக்காந்துக்கிட்டு காய்வான். ஆபீஸ் லெட்ஜரை எல்லாம் அடுக்கி வெச்சுக்கிட்டுப் பார்க்குறதும், சின்னக்குட்டிவளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்குறுதும், பொம்பளப் புள்ளைங்களக் கூப்ட்டு சுத்தி உக்கார வெச்சுகிட்டுப் பாட்டு சொல்லிக் கொடுக்குறதும், வெக்கங்கெட்டுப் போயி இந்தக் குட்டிங்களும் அவனையே சுத்திச் சுத்தி வர்றதும், அவன் கழுத்தைக் கட்டிக்கிட்டுத் தொங்கறதும் - 'அ:-சின்னதுங்களுக்கதான் ஒண்ணுந் தெரியாதுன்னா இந்த பெரிய முண்டைகளுக்குமா? என்னத்தெ சொல்றது? அவன் வந்தாலே போதும் மூஞ்சியெல்லாம் மலர்ந்து போவுது. ஒருத்தி ஏந்திருச்சுப் போயி காப்பி போடுறதும், ஒருத்தி அவனுக்குக் குளிக்க தண்ணி வளாவி வைக்கிறதும், ஒருத்தி ஓடிப்போய் துண்டு எடுத்து வந்து கொடுக்குறதும், அட சவரப்பெட்டியும், கிண்ணமும் கூட எடுத்து வைக்கிறாளுவ. இப்டிக் கூடவா வெக்கங்கெட்டுப் போவும்'' அவன் தலை மறையிற வரைக்கும் பொருமிக்கிட்டே இருப்பா மதுரம்பா, வெளியே வர்றதே கெடையாது! ஆமா!

''சுநந்தா இருக்குதே அதுக்கு கெப்புறு ஜாஸ்தி! அடங்காது. பதிமூணு வயசுல பதினெட்டு வயசு மாதிரி, கோங்கு மரத்துல கடைசல் பிடிச்ச சிலை மாதிரி இருக்கா. கலியராஜனுக்கு முதுகு தேய்க்கிறதுக்கு வெக்கமே இல்லெ அவளுக்கு. பொண்டாட்டியா அவ?''

அவன் தலைமறையிற வரைக்கும் பொருமிக்கிட்டு இருந்துட்டு மதுரம்பா எத்தனையோ வாட்டி சுநந்தா குட்டியெ வுட்டுக்கிட்டு வெளக்கமாத்தாலேயே லாத்திருக்கா. என்ன அடிச்சாலும் கலியராஜன் வந்த உடனே தாய்ப்பசுவைப் பார்த்த கன்றுக்குட்டி களாட்டம் இதுக எல்லாம் பாச்சலாப் பாயுதுவ. அதுவதான் என்ன செய்யும்?

அப்பன் உண்டா? அண்ணன் உண்டா? ஆம்பள ஒறவுன்னு என்ன தெரியும் அவளுவளுக்கு? கலியராஜனெ அடிச்சத் தொறத்துறதுக்கு அவந் எந்த வழியுமே விட்டு வைக்கெல பாவி!

மதுரம்பாளும் அவன் இந்தக் குட்டிகளோட ஒதுங்கி உக்காந்து லூட்டி அடிக்கிறப்பல்லாம் ஒதுங்கி ஒளிஞ்சு என்ன செய்றான்? ஏதாவது ஏடாகூடமா பண்றானா? தொட்டு அடிச்சுப் புடிச்சு விளையாடும் போதும் அதுக்குள்ற ஏதாவது வம்பு வெனை வெக்கிறானா? அந்தி சந்தி மயங்கல்ல இந்தக்

குட்டிகளோட அக்கண்ணு இக்கண்ணுல தப்புத் தண்டா பண்ணிப்புட்றானா? அப்படின்னு பதினஞ்சு, பதினேழு வருஷமா ஒளிஞ்சுக்கிட்டு உத்து உத்துத்தான் பாக்குறா.

அந்த 'எடம்'தான் ஒண்ணும் பண்ண முடியாத 'எடமா' இருக்கு! பொம்பளையா பிறந்திருக்க வேண்டிய பய இல்லென்னா ஆம்பளையா பொழைக்கத் தெரியாத பய. கண்ணும், புருவமும் கையும் காலும் அப்டியே அள்ளிக் கட்டிக்ணும் போலத் தோணும். இத்தனைக்கும் அவன் தெருவுல நடந்து வந்தான்னா யாருக்கும் வெறுப்பே வர்றதில்லெ... அப்டி ஒரு இது!

மதுரம்பாளுக்கு மட்டும் அவனை நெனைச்சாலே வெறுப்பும், வெட்கமும், அருவருப்புமா இருக்கு. அந்தக் குட்டி லலிதா வேலைக்கு சேர்ந்த ஆறாவது மாசம் மொத சம்பளத்தெரு மதுரம்பாளுக்கு அனுப்பலெ. நேரா கலியராஜனுக்குத்தான் அனுப்பினா. அடப்பயலே!

லலிதா லீவுக்கு ஊருக்கு வந்தப்போ "மொத சம்பளத்தெ பெத்த தாய்க்கு அனுப்பாம அந்த பயலுக்குத்தான் அனுப்பணுமாடீ?... அத்தனைக்குத் துப்பு கெட்ட செறுக்கியா நான்? அந்த நாய் இங்கே வரட்டும். நாக்கப் புடிங்கிக்கிறமாதிரி நாலு கேக்கிறேன்? பெத்த பொண்ணுவளேயே எதிரியாக்கிப் புட்டியாடா பாவி அப்டின்னு நாலு கேள்வி கேட்கிறேன். நாறப் பயலே?..." ஆனால் அவன் வந்த போது?...

"யம்மோவ் கலியராஜன் மாமென் வந்துருக்கு என்னமோ கேக்குறேன் கேக்குறேன்னு பாடுனீயே வந்து கேளு? இப்ப வா..."

இப்டி கத்துனது ஜோதிதான். வெக்கங்கெட்ட கழுதெ... மதுரம்பா அடுப்பங்கரையில் புகுந்தவதான் சாயங்காலம் வரை வெளியே வரவில்லை.

கதவிடுக்கு வழியாக வூட்டுக்குள் நடக்கிற அக்ரமத்தை அப்போதும் பார்த்துக் கொண்டுதான் இருந்தா மதுரம்பா. எல்லாக் குட்டிகளும் அவனோடு உராசிக்கொண்டு முத்தத்துப் பட்டகசாலையில் லலிதா அவன் காலில் விழுந்து நமஸ்காரம் எல்லாம் பண்ணினாள். இந்த வயணம்மெல்லாம் கூட இந்தக் கழுதையளுக்கு யார் சொல்லிக் கொடுத்தது?

அதுக்கும் முன்னாடியே அவன் கையிலிருந்து எவர்சில்வர் வாளியிலிருந்து பூந்தி முட்டாய்களை அவன் எடுத்து எல்லோருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தான். கடைசியாக ஜோதி பொண்ணு மிச்சம் இருந்த பூந்தியோட வாளியை சமையல் உள்ளே வந்து அவள் காலடியில் போட்டுவிட்டுப் போனாள். மதுரம்பா அழ ஆரம்பித்தாள். வாளி லேசாய்த் திறந்திருந்தது. பெரிய பெரிய அங்கூர் பூந்தி; நெய் வாசனை. சிவப்பு, ஆரஞ்சு, பச்சை, வெள்ளை நிறங்களில் சிறிய நெல்லிக்காய் அளவுக்கு பருத்த ரசம் உள்ள பூந்திகள்.

பூந்தியைப் பார்த்து அழுது கொண்டிருந்த அவள் மடியில் வந்து விழுந்து புரியாமல் தானும் அழ ஆரம்பித்தான் தம்பிராஜு பயல். ஒரு பூந்தி உருண்டையை எடுத்து மதுரம்பாள் வாயில் திணித்துவிட முயற்சித்துக்

கொண்டு, அம்மாவின் அழுகை நிற்காததால் அவனும் அழ ஆரம்பித்தான். அவனும் சிறிய குழந்தை அல்ல; பெரியவன்தான் என்றாலும், சின்னக் குழந்தை மாதிரிதான் வளர்ந்திருக்கிறான். லலிதா உள்ளே வந்து எட்டிப் பார்த்துவிட்டு எதுவுமே பேசாமல் போனாள். அப்படியே கீழே சுருண்டு படுத்துக் கொண்டு அங்கிருந்தபடியே முன்னே பார்த்துக் கொண்டு அயர்ந்து போய் வசதியாய் அழுது கொண்டிருந்தாள் மதுரம்பா.

லலிதாவுக்கு வேலை வாங்குவதும் அப்படி ஒன்றும் லேசாய் இருக்கவில்லை. எல்லாப் பொண்களையும் நன்றாகவே படிக்க வைத்திருந்தான். குடும்பம் அவனை நம்பி இருக்கவில்லை. மதுரம்பாளைத்தான் நம்பி இருந்தது அவன் வீட்டுக்குள் வந்து நுழையாமல் இருந்திருந்தால்... என்று நினைத்துப் பாராமல் இருக்க முடியவில்லை மதுரம்பாளுக்கு. ஆனால் அதை நினைத்த உடனேயே பயங்கரமாகவும் இருந்தது. வீட்டையே அடியோடு இடித்துக் கட்டியிருந்தான் கலியராஜன். எல்லாம் நிமிந்து வாழை மரமாயிடுச்சே!

பத்து பொண்ணுவளும் அவனுக்குள் அடக்கம். ஒரு காரியத்தையும் அவன் நினைப்பு இல்லாமல் செய்ய முடியாது. கோபம் வந்தால் உதைக்கவும், அடிக்கவும் அவன் தயங்கவேயில்லை. பொம்பளப் புள்ளைகளாச்சே என்று மதுரம்பாள்தான் பதறிப்போவாள். நிறைய அடி வாங்குவது விஜயாவும், ஜோதியும்தான். கன்னம், முதுகு என்று வரிசையாகக் கைநீட்டி விடுவான் கலியராஜன். மதுரம்பாளுக்குப் பதறிக் கொண்டு ரத்தம் துடிக்கும்.

'ஏண்டா பயலே இது மாதிரி செய்யிறே? நீ உருப்பிடுப்பியாடா?' என்று வாய் பொருமுவாளே தவிர வேற ஒன்றும் செய்ய மாட்டாள். போய் தடுத்தாலும் அந்த அடி தயங்காமல் தன் மேல் விழுந்து விடும் என்று நிச்சயமாக அவளுக்குத் தெரியும். முரடன் மட்டுமல்ல; பயம் அற்ற பிறவி அவன்.

ஜோதி ஒரு நாள் டான்ஸ் கிளாஸுக்குப் போய்ட்டுக் கொஞ்சம் லேட்டா வந்தாள். என்ன நடந்தது அன்னைக்கி! அடித்த அடியில் அவள் சில்லு மூக்கு உடைந்து ரத்தம் கொட்டியது. எப்பவும் கொஞ்சிக்கிட்டு இருக்கிற கலியராஜனா அவன்? ஏன் அப்டி அறையிறான்?

'ஆண் பிள்ளையை அடிச்சு வளக்கணும், பெண் பிள்ளையை ஒடிச்சு வளக்கணும் அப்படின்னு சொல்லுவாங்க. இவன் அடிச்சு கொன்னே போட்டுடுவான் போலருக்கே?' என்று பதறியபடி பட்டகசாலைக்கு ஓடி வந்தாள் மதுரம்பா. ஆனால்.

''நீ போம்மா! மாமா அடிச்சதுல தப்பு ஒண்ணுமில்லே,'' என்று அழுது கொண்டே சொன்ன ஜோதியை வியந்து பதறியபடி பார்த்தாள் மதுரம்பா.

''அந்த வக்கீல் வீட்டு அக்காவோட, அவங்க தம்பியோட சொல்லாம நானு சினிமாவுக்குப் போனது தப்புதான். மாமங்கிட்ட சொல்லாம போனதுக்குத்தானே அடிக்கிது?'' என்று கதறிய தன் பொண்ணைப் பார்த்து

அசந்து போனாள் மதுரம்பா. இது போலவே சுநந்தாவும் செம்மையாக மாட்டிக் கொள்வாள் கலியராஜன்கிட்ட.

உள்ளதுவல்லயே கொஞ்சம் வெடிச்ச குட்டி சுநந்தா! யாருகிட்டயும் கொஞ்சம் மயக்குவா. கண்ணு கிண்ணலாம் கொஞ்சம் எடுப்பா மை தடவி இருக்கும். கொஞ்சம் நிறம் கூடுதல் அம்மா மாதிரி. பயலுவோ கொஞ்சம் அதியமாவேதான் சுத்தி வந்தானுவ! கொஞ்சம் கருக்கான குட்டி; காலேஜுல வேற மோதல்! அப்படின்னு நூறு குட்டிகளுக்கு நடுப்புற நின்னான்னா கொஞ்சம் நிமிந்தே நிப்பா சுநந்தா.

சுநந்தாவோட போக்கே பெத்ததாயி மதுரம்பாளுக்குக் கூட புரியாது. ஆனா கலியராஜக்கு மட்டும் தெளிவாகப் புரியும்! ஏன்னா சுநந்தாங்கிற பொண்ணே பொண்ணா வளத்துருக்குறதே கலியராஜன்தான். பேருக்கு வீட்டுக்குள் கலியராஜன் வந்தப்போ ஏழு வயசுக்குட்டி இப்ப பத்து வயசுக்கு மேல் அதிகம் ஆகிப்போச்சு. பத்து வருஷம் அவன் பார்வையிலேயே வளந்த பொண்ணு! எதுவுமே அவன் சொன்னாத்தான் அவளுக்கு சரி. எது கேக்கணும்ன்னாலும் மாமஞ் சொல்லணும்.

பள்ளிக்கூடத்துல சேக்கணுமா? பல்லு வலிக்கிது டாக்டரெப் பாக்கணுமா? இன்னைக்கி என்ன கலர் கட்டுனா நல்லது? நல்ல நாளு. பெரிய நாளுன்னு யார் வீட்டுக்காவது போவணுமா? காலேஜ் போற வழியில நாலு பசங்க சைட்டு அடிச்சு, குபார் வுட்ரானுங்களா? எல்லாத்துக்கும் அவளுக்கு மாமன்தான் வேணும். கலியராஜனைத் தேடிக்கிட்டு வர்ற ஆபீஸ் ப்ரண்ட்ஸ்களுக்குக் கூட மதுரம்பா வீடுதான் கலியராஜன் வீடு. கலியராஜனோட அம்மா உயிரோட இருந்தா கலியராஜன் மாமா இங்கயெல்லாம் வருமா? நல்ல வேளை அம்மாகாரி இல்லெ. அதுக்குன்னு ஒரேடியா...

''ஏம் மாமா இங்கேயே கெடக்குறே? அங்க யாரு எல்லாத்தையும் பாத்துக்குவா? நீயி இப்டி தர்முவையே சுத்திக்கிட்டு இருக்கியே எப்பத்தான் கட்டிக்கப் போறியாம்?'' என்று எகத்தாளமாகக் கழுத்தைக் கட்டிக் கொண்டு கேட்பாள் சுநந்தா.

''ஒனக்கு வயசாச்சுடா சுநி. இப்டியெல்லாம் கழுத்தெக் கட்டிக்கிட்டுத் தொங்கப்படாது. ஒங்க அம்மா பாத்ததுன்னா எனக்கு ஒன்னையே கட்டி வெச்சிடும். அப்றம் தர்மு பாத்தான்னா அவளுக்குப் பதில் சொல் என்னாலாகாது. அதோட இந்தக் கறி, மீனு இதெல்லாம் திங்கிறதெ நீ கொஞ்சம் கொறச்சுக்கிறது நல்லது. இது என்னோட சின்ன அட்வைஸ்'' என்று கலியன் அவளை அப்படியே தூக்கி நாற்காலியில் உட்கார வைத்துவிட்டு, தன்னை விடுவித்துக் கொண்டதை சமையலறைக் கதவிடுக்கு வழியே குப்புறப்படுத்தப்படியே பதைபதைக்க அவதானித்துக் கொண்டிருந்த மதுரம்பாளுக்கு சிரிப்புத் தாங்க முடியவில்லை. அதே சமயத்தில் வருத்தமாகவும் இருந்தது. எப்பேர்கொத்த ஆம்பளை அவன். ஒன்டிக் கொண்டியா நின்னாக்கூட பத்துப்பேரைப் புரட்டிப் போடுற தெணறு

உள்ளவன். அவன் சாப்டும்போதெல்லாம் இந்த குட்டிகளெல்லாம் நான் நீன்னு போட்டி போட்டுக்கிட்டு அவனுக்குப் பரிமாறும்.

ஆன்னு வாயெத் தெறந்துகிட்டு தாவணி போறதுகூட தெரியாம அவன்கிட்ட மொதக் கட்டி மாம்பழம் வாங்குறதுக்கு லலிதா நிக்கும். பத்து உருண்டை உருட்டியாவும்; அப்றம்தான் அவனை சாப்ட விடும் எல்லா வெக்கங்கெட்ட நாயும்! அப்புறமும் கூட கடேசிக்கட்டி மாம்பழம் சுநந்தாவுக்கு.

''எங்கடீ அவ?''

'ஜீ' என்று சத்தம் போட்டுக் கொண்டே ஏதோ பிளேன் ரன்வேயில் வருகிறது போல் வந்து லபக்கென்று லபக்கென்று கடைசி உருண்டை சாதத்தையும் கட்டி மாம்பழத்தைத் தட்டிக் கொண்டு போகிற ருசியுடன் அவன் முன்னால் மண்டியிட்டு வாயை 'ஆ' வென்று திறந்து காட்டி ரசிக்கிறபோது அதற்கு ஏகப்போட்டி இருக்கும்.

சில சமயம் சாதம் சிதறிப் போகுறதும் உண்டு. எல்லாத்துக்கும் கொஞ்சம் கூட பதட்டம் இல்லாமல் அந்தக் குட்டிகள் மனம் கோணாமல் எல்லாத்தையும் சுலபமாகவே முளையில் கட்டி விடுவான். மேய்ச்சலுக்குப் போய் வந்த பசுக்கள் மாதிரி எல்லாம் ஒழுங்காய் நிற்கும்!

மதுரம்பாளுக்கும் நம்பவேதான் முடியவில்லை. கலியரா்ஜனுக்கு யார் மேல கண்ணு? பத்துக்குட்டிகளுமே கட்டிக்கும். சொன்னாப்போதும் எல்லாம் ரெடிதான்! சுநந்தாவைக் கேட்டுப்பாரு. ''எனக்குதான் மாமேன். வேற யாரும் மூச்சு விடப்படாது'' அப்டீன்னு தைரியமாவே சொல்லிடுவா.

மதுரம்பாளும் பொம்பளதானே? இத்தனை நாளுக்கு அப்றம் கூட அவனுக்கு யாருதான் வேணும்ன்னு மதுரம்பாளுக்கு கூடத் தெரியலையே! ஒரு நாள் கூட அவன் வராமல் நின்னதில்லெ. இந்த வூட்டுப் பொறுப்பு எதையும் யாருக்கும் வுட்டுக்கொடுத்தது இல்லெ. அதைவிட வேடிக்கெ என்னன்னா யாரும் கூப்ட்டு அவன் இந்த வீட்டுக்குள்ள வர்லெ. இந்தப் பதனஞ்சு இருபதஞ்சு வருஷத்துல மதுரம்பாளுக்குன்னே ஒரு அழுத்தமான கோட்டையா - பாதுகாப்பா மரியாதையா மிகமையா ஆம்பளையா அவன் இருந்துக்கிட்டு இருக்கான். இனிமே அவன் இல்லாமெ இங்க எதுவுமே இல்லெ. காலையில தம்பிராசு ஓடியாந்து பள்ளிக்கூடத்து ப்ராக்ராஸ் நோட்டுல அவங்கிட்ட கையெழுத்து வாங்கி வைக்கச் சொல்லீட்டுல்ல போறான்? பத்து வருஷமா கையெழுத்துப் போட்டவ மதுராம்பாதான்.

மொளச்ச மூணு எலெ விடலே அது சொல்லுது ''நீ இனிமே கையெழுத்துப் போட வேணாம்! மாமென்தான் போடும்!'' அப்டிங்கிறானே என்ன எளவு இது.

''நீ யாருகிட்ட வேணும்மானாலும் கையெழுத்து வாங்கிக்கப்பா. நான் இந்த வீட்டு மூலத் தொடப்பக்கட்டே அவ்வளவுதானே? ஒப்பன் ஒங்கள ஏங்கையிலே வுட்டுப்டுப் போனான். மூணாந்தாரத்துக்கு முப்பத்திரண்டு புள்ளெம்பாங்க. அந்த லெக்குல பதனஞ்சு வயசுல கலியாணம் பண்ணி ஒப்பனுக்குப் பத்துப்புள்ளெ பெத்து நடுத்தெருவுல நின்னேன்.

''ஏஞ்சாதிசனமும், ஒப்பன் வூட்டுக் கும்பலும் அண்டவுடாமெ மண்ண வாரித் தூத்துனதுவ; ஒரு கண்ணாலம், கருமாதிக்குப் போயிருப்பேனா? அன்னைக்கும் வூடே கதி, அடுப்பங்கரையே தர்பாருன்னு இந்த மன்னார்குடியில கொட்டடியில் கொண்டாந்து அடச்சுப்புட்டு, பட்டாளத்துக்குப் போய்த் தொலைஞ்சாருங் கொப்பன்! தாலிக்கொடியைப் பிரிச்சு மூணாம் மாச சோறே, குண்டு, மணி எல்லாம் கோத்து மாட்டிப்புட்டு போனதி லிருந்துங்கோப்பன் பதினஞ்சு திருப்பம் இந்த வீட்டுக் குத்துச் செங்கல்ல மிதிச்சு உள்ள வந்திருக்காரு!

அதுக்கும் மேல ஒங்கொப்பனப் பத்தி என்ன தெரியும்?

இன்னைக்கு வந்து நீ கையெழுத்துப் போடாதே; மாமென் கையெழுத்துப் போடணும்ங்கிறியேடா? யார்டா அந்த மாமென்? எங்கயிருந்து வந்தான்? துப்புக்கெட்டப் பயலே? பெரிய பவுரு காட்டிக்கிட்டு இஞ்ச வந்து, இஞ்ச படுத்து, இஞ்ச தூங்கி, இங்கே திண்ண இங்கேயே கொட்டம் போட்டுக்கிட்டு என்னையே மேக்கிறிச்சுக்கிட்டுத் திரியிறான் கலியராஜு. அவன்தான் ஒங்களுக்கு எல்லாம், இல்லெ? நான் பீத்தொடச்ச கல்லு!'' என்று முழுப்பாட்டாகப் பாடித் தீர்த்தாலும் அன்று மாலை முழுசும் மதுரம்பாளுக்கு நெஞ்சுவலி. சமீப காலமாக மதுரம்பாளுக்கு இந்த நெஞ்சுவலிதான் ஆறுதல்.

அது வலி மாதிரியே இருக்காது. நெஞ்சில் ஒரு தாங்க முடியாத பாரம் தூக்கி வைத்த மாதிரி இன்பமாய் இருக்கும். கலியராஜன் வந்து, ''என்னத்தை நெஞ்சுவலியா? வழக்கம் மாதிரி'' எனக் கேட்க வேண்டும். சமையல் அறை உள்ளே அவன் வரவே மாட்டான். இந்தப் புறத்திண்ணையில் மதுரம்பாள் இருந்தால் அந்தப் புறத்திண்ணையைத் தாண்டி வீட்டை சுற்றிக் கொண்டு அந்தப் பக்கமாகப் போறவன் அவன். ஆனால் அவன் வர வேண்டும். இந்த வீட்டில் இருபது வருஷமான சிரிப்பு சத்தம் இல்லாது ஒரு ஜீவன் நசுங்கி கொண்டிருப்பது அவளுக்குத் தெரியும்தானே? வேற ஒண்ணும் செய்ய வேண்டாம்.

அத்தை என்று கூப்பிட்டடும் கூப்பிடமாட்டான்! நெஞ்சு வலிக்குதா டாக்டர்கிட்டே போவோமா? ஏன் அத்தை, இந்த அலீப்ஃமெண்ட் மாத்திரையை போட்டுக்கக் கூடாதா? ஏந்தை ஒடம்பெ கவனிச்சுக்கக் கூடாதா? இப்டியே ஏன் இருக்கீங்க?'' மதுரம்பா நசுங்கி போவா; ஏம் மனசுல இருந்தா இந்த நோக்கம்? இந்த எண்ணம்? கூடாது. கூடவே கூடாது. ஐய்யோ-குமுறிக் கொண்டு வரும் அழுகையை நோக்கி, அப்றம் மூன்றாம்நாள் அன்ன ஆகாரமில்லாமல் அப்டியே கிடப்பாள் மதுரம்பா. அவள் மார்புத்துடிப்பு அவளுக்குள்ளே தமீ...தமீர்...தமீர்...என்று தமீர் போடும். மூன்று நாள் பத்துப் பொண்டுவளும் வந்து சுத்தி உட்கார்ந்து.

''ஏம்மா சாப்ட மாட்டேங்கிறே?''

ஒவ்வொரு நாளும் வீடு சாவு வீடு போல் அவலத்தில் ஆழ்ந்து போய்விடும். அப்போதும் கலியராஜன் அங்கே வரமாட்டான். அவன் வரவேண்டும் என்று அவள் நினைக்கா விட்டாலும், நெஞ்சுவலி

ஏறிக்கொண்டே போவும். அவளை எட்டிக்கூடப் பார்க்க மாட்டான். மதுரம்பாளுக்கு அவமானமும், கஷ்டமும் வேதனையும் வெட்கமும். நெஞ்சில் அறையும்!

பேய்த்தனமான ஆசையும், மிருகத்தனமான நேர்மையும் எந்திரம் போன்ற உழைப்பும் பத்துப் பெண்களின் தாய்மையும் ஒன்றாகச் சேர்ந்து நெஞ்சம் பாறையாய்க் கட்டிக் கொள்ளும். அன்னம், தண்ணி, ஆகாரம் ஏதுமில்லாமல் அவள் கட்டிய சேலையுடன் இருட்டில் ஏன் கிடக்கிறாள் என்று பொண்டுவள் யாருக்கும் தெரியாது.

முப்பது வருஷத்துக்கு முன்னால் வடிவேலுவோட ஓடி வந்தப்பக்கூட ஒரு துணை இருந்தது. ஒரு தைரியம் இருந்தது. வாழ ஒரு காரணம் இருந்தது. இப்ப எதுவுமே இல்லெ. வடிவேலு எப்டி செத்தாரு? அப்டின்னு கடேசியா மூஞ்சியெக்கூட பட்டாளத்தானுவ காட்டலெ. ஆயிரம் மைலுக்கு அப்பால இமயமலை பனிச்சரிவுல எஞ்சியோ வடிவேலு போன விமானம் தொலஞ்சு போச்சு! இந்த நெஞ்சுவலி மிச்சம்தான் மதுரம்பாளெ இன்னமும் ஞாபகம் வச்சிக்கிட்டு இருக்கு. தொரத்தித் தெரத்திக்கிட்டே போறா. ஆத்திரம் தாங்க முடியாமெத்தான் தர்முகிட்டெ அன்னைக்கு சொன்னா:

''எப்பக் கல்யாணம் வச்சுக்கலாம்? அப்டின்னு அம்மா கேக்குறாங்க அப்டின்னு கேளுடீ! இதுவரைக்கும் இருந்த யோக்யதை போதும்! இனிமெ ஊர் வாயெ மூட முடியாது. யாரையாவது கட்டிக்கிட்டுத்தான் ஆவணுமாம். எல்லா பயலும் இந்தக் குடும்பத்துத் தலையில கல்ல அள்ளிப்போடலாம். மண் அள்ளிப் போடலாம்ன்னு காத்துக்கிட்டு இருக்கான். இனி மேலயும் இதே மாதிரி ஒன்னெ விடுறதுக்கில்லெ! அப்டின்னு ரெண்டுல ஒண்ணு கேட்டுச் சொல்லுடீ''ன்னு ஆத்திரத்தோட மதுரம்பா தர்முகிட்ட கத்துனா.

சமையலையிலிருந்து தர்முவும், தாயும் பேசுகிற மாதிரி இல்லெ. ஏதோ சினேகிதிகள் பேசிக்கிற மாதிரிதான் இருந்தது. தர்முவுக்கு அப்டியே மதுரம்பா வடிவு! சந்தனத்தில் கடைசல் பிடித்த செம்மையான உருவம்மாதிரி இருப்பாங்க ரெண்டு பேரும். ரெண்டு பேரையும் பக்கத்துல நிறுத்தினால் அக்கா, தங்கச்சி மாதிரி இருக்கும். இதுக்காகவே மதுரம்பா வெளியே போறது நின்னு போச்சு. எப்படியாவது கலியாராஜனெ தர்முவுக்குக் கட்டி வெச்சுட்டா எல்லா பழியும் ஓஞ்சு போவும். யாரும் எதுவும் சொல்ல முடியாது. நெஞ்சுக்குள்ளே துரத்தி வர்ற வலி அப்போதே 'நானும் இருக்கிறேன்' என்று சுள்...ள்...ளென்று வலித்துக் காட்டியது. தலையைத் தூக்கவிடாமல் அடித்த அந்த வலியால் மதுரம்பா நெஞ்சில் கனல் ஏற்றியது.

''நான் என்னம்மா செய்யிறது? நானா போயி தாலி கட்ட முடியும்! மாமன்ல்ல கட்டணும்! சுநந்தாவுக்கும் வேணும். இந்தக் கடேசிக்குட்டி கூட கட்டிக்கன்னா கட்டிக்குவா. நானும், லலிதாவும் எப்பவாச்சும் லீவுக்குத்தான் இனிமே வரப்போறோம். ராஜலெட்சுமியும், ஜோதியும் திரும்பி ஆயிரம் மைலுக்கு அப்பால போயிடப் போறாங்க! மாமனுக்கு நோட்டம் யாரு மேல. அப்படின்னு நீயும் பத்து, பதனஞ்சு வருஷத்துல சல்லடபோட்டு அரிச்சுதான்

கேட்டுப் பாக்குறெ. மாமென் கெட்டி உருண்டை உருட்டி வச்சாப்ல இருக்கு. யாரு திங்கப் போறா! நீதான் கெடந்து அல்லாடுறே'' என்றாள் தர்மு!

''அடீ தர்முக்குட்டி யாரோட பேசிகிட்டு இருக்கே? ஒரு டம்ளர் வென்னில ஒரு துண்டு சுக்கு தட்டிப்போட்டு பனங்கல்கண்டு இருக்கா? அதுல ரெண்டு அள்ளிப்போட்டுக் கொண்டா! பேங்க்ல இன்னைக்கு பென்ஷன் தரங்கலெ. அப்படியெ வயக்காட்டுக்குப் போயிட்டு, வீட்டுக்கும் போயிட்டு ஒரே முட்டா அலைச்சல். காலையில சாப்ட்டது நெஞ்சுக் கரிச்சுக்கிட்டு வருது.''

உள்முற்றத்தில் இருந்து கலியராஜன்தான் கத்தினான். ரெண்டு பெண்களும் மின்சாரம் பாய்ந்தது போல ஆனார்கள். பேச்சு அடங்கிவிட்டது. வாரி சுருட்டிக் கொண்டு எழுந்த மதுரம்பா, அஞ்சு நிமிசத்தில் சுக்குக் கசாயத்தைத் தேனூற்றிக் கலக்கி தர்மு கையில் கொடுத்து,

''பித்தம் எறங்குனும்ல தலை கொழுத்து ஆடுறான். இப்டி இருந்தீன்னா புருஷனா பாக்க முடியாது! பனங் கல்கண்டு இல்லியாம் தேனுதான் ஊத்திருக்கன்னு சொல்லிக் கையில் கொடு. வளச்சு மயக்கி போடு!''

''ஏம்மா மாமன்கிட்ட போயி இதெல்லாம் பண்ணச் சொல்றே? நீயே போயி கொடுத்திரு!''

''நான் என்னைக்கீடீ அவன் முன்னால போயி நின்னேன்! பீமனாட்டம் எருமக்கடா மாதிரி நின்னுக்கிட்டு இருப்பான் எனக்கென்ன, இன்னுங் கொஞ்ச நேரத்ல கத்தப்போறான். அப்படியே நீயே எடுத்துட்டுப் போப்போய் அது என்னடி அது அவன் என்மேல போயி ஓராசிரீங்க? இடுப்புல கட்டிக்கிட்டு ஒருத்தி, கழுத்தைக் கட்டிக்கிட்டு ஒருத்தின்னு தொங்குறீங்க. வயசுப் பொண்ணுவ இதெல்லாம் ஆவாதுடீன்னு நான் கத்தக்கத்த பூவும், பொட்டும், பொடவையுமா அவன் முன்னால் போயி மாரெ நிமித்திக்கிட்டு நின்னு, 'நல்லாருக்கா மாமா'ன்னு கேக்குறீங்க? அப்பல்லாம் வராத வெக்கம் - என்னக் கட்டிக்கிறியாடா? இல்லையா அப்படின்னு கேட்கும்போது வந்து ஓங்க வாயெ அடச்சுறதே? என்னாடி அக்குறும்பு இது? எங்க போயி சொல்றது? சொன்னாலும் நம்புறது யாரு?''

''ஏட்டீ தர்மு, மண்டையெப் பொளக்குது வலி! சொல்லி அரை மணி நேரமாச்சுல்லெ. எல்லா நாய்களையும் ஒதச்சுப் பிரி கட்டணும். அப்பதான் சரி வரும். ந்தா...அஞ்ச, சமையக்கட்டுல யாரு? சொல்றது காதுல விழலெ!'' என்று மறுபடியும் கூப்பாடு போட்டான் கலியராஜன்!

''ஏம் மாமா கத்துறீங்க? அம்மாதான் சமையக்கட்டுல இருக்காங்களே!'' என்று பாய்ந்து பட்டக சாலை வழியாக ஓடினாள் ஜோதி.

ஃபைல் கட்டுகளின் முன்னால் உட்கார்ந்து கொண்டு தலையை இறுகப் பிடித்துக் கொண்ட கலியராஜனுக்கு. லேசாகத் தலைசுற்றுவது போல் இருந்தது. மாலை நேரம் வாசலில் தண்ணீர் தெளித்து, வாசல், திண்ணை, முன்கட்டு, சந்து எல்லாவற்றிலும் கோலம் போட்டுக் கொண்டிருந்த சுநந்தாவுக்கு அப்படியே கோலப்பிறையை வைத்துவிட்டு உள்ளே வந்து, இன்னும் கொஞ்ச நேரத்தில்

நடக்கப்போகும் அமளியில் கலந்து கொள்ள வேண்டும் போல் தோன்றியது. அவளுக்குத் தெரியும், கலியராஜன் ஒன்றையும் முடிவுக்குக் கொண்டு வரவிடமாட்டான்.

பட்டகசாலையிலிருந்து கஷாயத்துடன் வந்த தர்முவும், மாடிப்படியிலிருந்து இறங்கியபடி நிற்கும் ராஜலெட்சுமி மற்றும் சிறுசு பெருக எல்லாம் அமளிக்கு ரெடியாகத்தான் இருந்தார்கள். மாமனெ யார் கட்டிக்கிறது? சுவாரஸ்யமான கேள்விதான்! பதிலும் எல்லோருக்கும் தெரியும்! பெரிய முழியெ உருட்டி எல்லாரையும் ஒரு தடவெ கோவமா பாக்க வேண்டியதுதான்! எல்லாக் குட்டிகளும் அதது பிரிஞ்சு, மறைஞ்சு போயிடும்! மதுரம்பா வாயெத் தொறக்கமாட்டா. அவ்வளவுதான்!

ஆறுமாசத்துக்கு ஒரு தடவை இல்லேன்னா பத்து மாசத்துக்கு ஒரு தடவை சொல்லி வச்சாப்ல இது மாதிரி அமளி துமளி படும். ஆனா, கடேசில யாராவது ஒருத்தி கலியராஜங்கிட்ட அடி வாங்கிட்டு அழுவுறதோட கதெ முடியும்! காரியம் ஒண்ணும் நடக்காது. கல்யாணமும் அப்டித்தான்!

ஆனா அந்த நியாயங்களை எல்லாம் ஒவ்வாரு குட்டியா தகிரியமா பேசுறதுக்கும், அதுகளுக்கு முழு உரிமை கொடுத்து அதுகளைப் பேசவும் வுட்ருக்கான் கலியராஜன். எல்லா பொண்டுவளுக்கும் கலியராஜன்னா உசுருதான்.

அப்றம் ஏன் ஒண்ணுஞ் சொல்லமாட்டேங்கிறான்? அத்தே மாதிரி ஏமாத்திக்கிட்டும், இல்லெ இல்லென்னு ஒதுக்கிக்கிட்டும்; கிட்ட வந்தா எட்டிப் போறதும், எட்டிப் போனா கிட்ட வர்றதுமா இப்டி ஒரு வெளையாட்டு ரொம்ப நாளா எல்லோர்க்கும் புடிச்சுப் போயிருந்துச்சு.

கலியராஜன் கஷாயத்தைக் கையில வாங்கிக் குடிக்கும்போது,

''ஒண்ணும் இல்லெ மாமா, ஒனக்கும் எனக்கும் கல்யாணம் பண்ணப் போறாங்களாம்? அம்மா கத்துறாங்க! காலையிலிருந்து நீங்க எப்ப வருவீங்கன்னு எல்லாரும் ஒங்களையேதான் எதிர்பார்த்துக்கிட்டு இருக்காங்க!''

''சுநந்தா''... என்று கத்தினான் கலியராஜன்.

''ஒன்னே எங்க போகச் சொன்னேன்; இங்கே வந்து நீ நின்னுக்கிட்டு இருக்கே. நாஞ் சொன்ன வேலையெல்லாம் முடிச்சியா? ஒன்னுடைய அப்ளிகேஷன் காப்பீஸ் எல்லாம் போஸ்ட் பண்ணியாச்சா? எல்லாம் டைப் பண்ணி, அட்டெஸ்ட் பண்ணி, ரிஜிஸ்டர் பண்ணி அனுப்பச் சொன்னேனா? அனுப்பிச்சிட்டியா?

எங்க ராஜலெட்சுமி? ஊருக்குப் போறேன்னா பணம் வேணுன்னா; பணத்தெ வாங்கிட்டு வந்து வச்சிருக்கேன் ஆளே காணும்? இங்கே வந்து மூணு மாசமாச்சு லீவு லீவுன்னு. ஊருக்குப் போறதா இல்லியான்னு நெனப்பு இருக்கா? அவளுக்கு என்னன்னு தெரியலை. இன்னும் பத்துநாள் கழிஞ்சாச்சுன்னா லாஸ் ஆஃப்பே. பெரிசுகளைப் பாத்து சின்னதுகளும்

குட்டிச்சுவராகுதுங்க. பணத்தெ ஒழுங்கா அம்மாக்காரிக்கு அனுப்பித் தொலைங்க. இல்லேன்னா அது என்னெ சமையக்கட்டல இருந்துகிட்டே வண்டை வண்டையா திட்டி மொண மொணத்துக்கிட்டே காலம்பூரா நிக்கும். நாகலட்சுமிகிட்ட சொல்லி ஸ்டேஷன்ல்ல வெச்சு எல்லாத்தையும் ஒரு நாளைக்கு வாங்கு வாங்குன்னு வாங்கினாதான் தெரியும்.''

''ஸ்டேஷன்ல தப்பு செஞ்சவங்கள தண்டிப்பாங்களா மாமா?'' என்றாள் விஜயா!

''ஆமா பின்னே என்னவாம்? ஒங்க எல்லாரையும் ஏதாவது ஒரு செக்ஷன்ல உள்ள தள்ளணும்!''

''அப்ப ஒங்களத்தான் மாமா மொதல்ல உள்ள தள்ளணும்!''

''என்னாத்துக்காங் நான் என்ன தப்பு பண்ணேன்?''

''நீங்க எல்லாரையும் கட்டிக்குறேன் கட்டிக்குறேன்னு ஏமாத்திட்டே இருக்கீங்களே? யாரைக் கட்டிக்கப் போறீங்க? அத சொல்லலைன்னா. இஞ்ச எல்லாருக்கும் மண்ட வெடிச்சுப் போயிடும்'' என்று சொல்லிவிட்டு 'கொல்' லென்று சிரித்தாள் சுநந்தா!

நீளமான அவள் விழிகள் எனக்கு எனக்கு என்பதுபோல் இருந்தது. சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டி விட்டு, பனியனையும் உருவி முற்றத்தில் இருந்த துவைக்கல்லில் எறிந்தான் கலியராஜன். எதையுமே கண்டு கொள்ளாமல் ஜோதிப் பெண் உடனே துவைக்கல்லில் இருந்த கலியராஜனின் பனியனை எடுத்தது. சுவரோமாக இருந்த வாஷிங்மிஷினில் போட்டு சுவரில் இருந்த பச்சை விளக்கு எரிய சுவிட்டசைத் தட்டிவிட்டாள்.

''இருடீ இந்த சட்டையும், வேட்டியும் அப்றம் யார் போடுறது?'' என்று சொல்லியபடி விஜயா ஆணியில் மாட்டிய சட்டையை எடுத்து அதில் இருந்த பையிலிருந்து பணம், சாவிக்கொத்து, சில்லரை, ரசீதுகள் இவைகளை எடுத்து அலமாரியில் வைத்துவிட்டு அந்த சட்டையை மார்புடன் அணைத்துக் கொண்டு,

''வேஷ்டியைக் கழட்டித் தர்றீங்களா மாமா?'' என்றாள் விஜயா.

லலிதா தன் பெட்டியிலிருந்து எடுத்துக் கொண்டு வந்த சிங்கப்பூர் கைலியை வாங்கி, அதில் நுழைந்து கொண்டு வேஷ்டியை உருவி லலிதா மேல் எறிந்தான் கலியராஜன். வெறும் கைலியில் வெற்றுடம்புடன் ஒரு சின்ன சிவ மூர்த்தி சிலை மாதிரி விரிந்து கொண்டு முற்றத்தில் இறங்கிக் காசித்துண்டை கட்டிக் கொண்டு வளைந்த ஷவர் பைப் முன் நின்று அதன் சக்கர வட்டத்தை பிடித்து சுழற்றி விட்டான். ஷவரிலிருந்து தண்ணீர் மகிழ்ச்சியாக சீறிக் கொண்டு அவன் உடலெங்கும் வழிந்தது. நீளமான முற்றம். அவனே பிளான் போட்டு பழைய வீடு மாதிரியே ஆனால் புதிதாகக் கட்டிய முற்றம். முற்றம் முழுவதும் மொஸைக் கருங்கற்கள் ஒரு அங்குலக் கற்களாக பளபளவென்று மின்னுகிறது!

''என்ன மாமா நான் கேட்டதற்குப் பதிலே காணும்? அம்மா ரொம்ப கோவமா இருக்காங்க. யெஸ் ஆர் நோ ரெண்டுல ஒண்ணு தெரிஞ்சாகணுமாம்.

இனிமேலும் இப்படியே நீண்டுகிட்டே போகவுடமாட்டோம்'' என்று சொல்லும்போதே அவள் கண்கள் இருண்டன! தொண்டையில் பந்து ஒன்று உருண்டது. ஒரு கணத்தில் அடைத்துக் கொண்டது. ஒரு கணத்தில் அவள் குரல் தழுதழுத்தது. நாக்கு மேல்லண்ணத்தில் ஒட்டிக் கொள்ள அங்கிருந்தபடியே சமையல் கட்டை நோக்கித் திரும்பி நின்று கொண்டாள்.

ஒரு விஷயம் கலந்த அமைதி அங்கு எல்லோரையும் தீண்டியது. ஆனால் இதைப்பற்றியெல்லாம் எப்பொழுதும் போல் கவலைப்படாமல் தண்ணீரின் குளுமையை அனுபவித்து வாரி இறைத்துக் குளித்தான் கலியராஜன்!

''டாங்குல தண்ணீ இருக்கா பாருடீ'' என்று கத்தினான்.

ஜோதி படியேறி ஓடினாள். அவன் குளிக்கிற லாவகத்தில் ஈடுபட்டபடியே மேலேறி ஓடினார்கள் மற்ற மூவரும்!

கூடத்தில் இருந்த சுநந்தா வழக்கம்போல்

''முதுகு தேய்க்கட்டா மாமா?'' என்றாள் சற்றே தயக்கத்துடன்.

''இன்னைக்கி நான் தேப்பேன்'' என்று முன்னமே ஓடி வந்த விஜயா கையிலிருந்த சோப்பை யார் தட்டிப் பறித்தார்கள்? எல்லோரும் தேய்க்கு முன் போலீஸ் உடுப்பிட்ட கை ஒன்று ''இன்னைக்கி என் டூட்டி!'' என்ற குரலுடன் இறங்கி நின்ற நாகலட்சுமி அவளாகவே அந்த சோப்புடன் கொஞ்சம் மல்லுக்கு நின்றாள்.

''இதுல ஒண்ணும் கொறச்சல்லெ'' என்று காறித் துப்புகிற சத்தம் சமையற்கட்டிலிருந்து கொஞ்சம் கனமாகவே எழுந்தது!

குட்டித் தங்கைகள் ரெண்டு பேரும் வெளியிலிருந்து உள்ளே ஓடி வந்தார்கள். கூடத்தின் நடுவில் செங்குத்தாக நின்று கொண்டிருந்த தர்மா அப்போதும் திரும்பவில்லை.

''அக்கா'' என்று கத்திக் கொண்டு தர்மாவைக் கட்டிக் கொண்ட அந்த ரெண்டு குழந்தைகளும் திரும்பவும்,

''ஏங்கா அழுவுறே?'' என்று தொடர்ந்து முறையிட்டனர். எதிரே தூணில் சாய்ந்து கொண்டு எதிலுமே சம்பந்தப்படாதது போல் நின்றிருந்த ராஜலெட்சுமியும் கண் கலங்கி கண்களைத் துடைத்துக் கொண்டு ரகசியமாய் ஒளிந்து தூணிலேயே ஒண்டினாள். நாகலஷ்மி வந்ததும், நேரடியாக அவனிடம் போய்விட்ட வேகம் எல்லோருக்கும் உறைத்தது. கீழே வந்த ஜோதி முற்றத்தில் இருந்த மோட்டார் சுவிட்சைத் தொட்டு, மோட்டார் சுவிட்சைத் தட்டிவிட்டு, ''தண்ணி இருக்கான்னு கேட்டுட்டு குளிக்கப் போயிருக்கலாமல்லெ? தொட்டில இவ்வேளாண்டு தண்ணிதான் கெடக்கு!''

''இருக்கட்டும் சோப்பு தேய்ச்சவுட இன்னும் நேரமாகும்'' என்றாள் நாகலட்சுமி.

''என்ன பெருமாளையா குளிப்பாட்டுறீங்க? போங்கடீ; நாங் குளிச்சுக்கிறேன். ஒன்னோட போலீஸ் யூனிபார்ம்லாம் சோப்பு இளிப்பிக்கிட்டு நெனைஞ்சு போயிருச்சுப்பாரு! 'போதும்போ' '' என்று தடுத்து அவள் கைகளைப் பிடித்துக் கொண்டான் கலியராஜன்!

நாகலஷ்மி காரணமே இல்லாமல் தன் பிடியை இறுக்கவும் கலியராஜன் மறுத்து ஒதுக்கவுமாய் ஒரு சின்ன உராய்தல் அங்கே நேர்ந்தது. அவள் கன்னங்கள் ரத்தம் ஏறச் சிவந்தன. தாங்க முடியாத வெட்கத்துக்கு ஆளாகி அவள் காது மடல்கள் இரண்டும் அனல் கொண்டு நின்ற தர்முவைப் பார்த்து கண்களால் ஏதோ உணர்ந்து போன நாகலட்சுமி நிதானத்திற்கு வந்தபோது கலியராஜனும் நிதானத்துக்கு வந்திருந்தான்.

எல்லாமே எதிர்பார்த்ததைப்போல் அந்த வீட்டில் சுறுசுறுப்பாக நடக்கும்! யாரும் யாரையும் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். குளியல் நடக்கும்போதே, சுருண்டு கிடந்த மதுரம்பா தானாகவே ஏந்திரிச்சு அடுப்பில் தோசைக்கல்லைப் போட்டு முறுகலாக நெய்யூற்றி தோசை சுட ஆரம்பித்துவிட்டாள்.

அந்த மணம் கூடத்துக்கும் வந்தது. அவன் துண்டால் தலையைத் துவட்டும்போது நாகலட்சுமி படியேறி ஓடினாள். பட்டகசாலை விளக்குகளை விஜயா போட்டுவிட தடுக்கு ஒன்றை சின்னக்குட்டிப் பெண் ஒருத்தி அங்கேயே கொண்டு வந்து போடவும், வெள்ளித்தட்டு ஒன்றை சுநந்தா பரபரப்புடன் கொண்டு வந்து வைத்து சுடச்சுடத் தக்காளி சட்டினியும், தேங்காய்த் துவையலுமாய் ராஜலெஷ்மி வரவும், அவன் கண்ணாடி பீரோவின் நீண்ட பெரிய கண்ணாடியில் இடுப்பு ஈரத்துணியோடு தலை சீவிக்கொள்ளும் அலங்காரத்துக்கும் ஒருத்தி பக்கத்தில் நின்று சீப்புக் கொடுத்து வாங்கவும் ராஜோபசாரம் சரியாகத்தான் நடந்து கொண்டிருந்தது. அப்போதும் நனைந்த கண்களோடு தர்மு அவன் எதிரே தான் சேர்ந்து போய் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். வழக்கம் போலவே அவளைப் பார்த்து, ''கல்யாணம் விஷயம் அப்றம் பாத்துக்கலாம்! மொதல்ல என்னோட வந்து உக்காந்து சாப்டு! என்னா பொண்ணு நீ! ஒனக்கு ஒண்ணும் புரியாது. ஒங்கம்மா ஏதாவது குத்தி குத்திவுடும். நீ இஷ்டத்துக்கு ஆடலாம்ன்னு பாக்குறே; நடக்காது; நான் இருக்குற வரைக்கும் எதுவும் நடக்காது. கெடக்கு சாப்டவா'' என்று சொல்லிக் கொண்டே தட்டின் முன்னே போய் உக்காந்து கொண்டான் கலியராஜன்!

''விஜயா என்னோட பேக்கை எடுத்துட்டு வா'' என்று கட்டளையிட்டுவிட்டு தனக்கு முன்னால் அருமையான குருத்து வாழை இலையில் நெய் மினுமினுப்போடு வட்டம் வட்டமாக உளுந்தின் சுகமான வாசனையுடன் வெந்த தோசை இரண்டின் சுவையை நுகர்ந்தான் கலியராஜன்! குனிந்து அவன் முகத்தைப் பார்த்தபடியே ''இன்னும் கொஞ்சம் '' என்று தேங்காய்த் துவையல் பத்தை கொஞ்சம் நீளமாவே தோசையின் மேல் தடவி விட்டாள் சுநந்தா!

''கொஞ்சமாக வை'' என்று அவன் சொல்லாமல் இருக்க வேண்டுமே என்று பயந்து கொண்டுதான் துவையல் உருண்டையை சுநந்தா தோசையின் மீது நீளமாக இளுப்பிவிட்டாள்!

மாடியிலிருந்து கண்களைப் பறிக்கிற மாதிரி அமெரிக்க ஜார்ஜெட் ஃப்ளோரெசண்ட் ஆரஞ்சு, பச்சை, நீலம் போன்ற பூக்கள் அடர்ந்த ஸாரியும் அதே நிறங்களில் ஒன்றில் எடுப்பாக ஜாக்கெட்டும் அதன்பின் கழுத்து

வெட்டுமாக கீழே வந்தாள் நாகலட்சுமி. அவளும் வந்து கலியராஜன் பக்கத்தில் தானே ஒரு வாழை இலையைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொண்டாள். அவ்வளவுதான்! பட்டாளம் முழுக்கவும் கலியராஜனைச் சுற்றிலும் உட்கார்ந்து கொண்டார்கள்! சாப்பாடு துவங்கியது.

ராஜலட்சுமி தோசை அடுக்கோடு வந்து பரிமாறிக்கிட்டு இருக்கும்போது பையிலிருந்து நாலைந்து போட்டோக்களை எடுத்து தர்முவின் முன்னால் போட்டான் கலியராஜன்!

''மொதல்லெ இருக்க பையன் கண்டியர் வூட்டுப் பையன். ஸ்டேட்பாங் ஆஃப் இந்தியாவுல மூவாயிரம் ரூபா சம்பளம். இவன் தர்முவுக்கு முடிச்சாச்சு.

அடுத்தது கோட்டு போட்ருக்கான்ல்லெ அந்தப் பையன் முருகையன். டாப்லெவல்லெ மினிஸ்ட்ரில இருக்கான் டெல்லியில. இங்கே ஒண்ணு டெல்லி இருக்குல்லெ ராஜலெட்சுமி அதுக்குதான்.

அடுத்த படத்துல இருக்கானெ கொஞ்சம் கச்சலா, அந்தப் பையன் ரெங்கராஜு போலீஸ் ஆபீஸ்ல பி.ஏ.டு. சூப்பரின்டெண்டெண்ட் ஆஃப் போலீஸ். இவன் யாருக்கு தெரியும்ல்லெ? நம்ப வூட்டு போலீஸ்காரிக்கு.

அடுத்தது ரெண்டு படம் இருக்கே? அது ரெண்டும் அண்ணன் தம்பிய; மேக்குடியாரு பட்டப் பெயரு. நல்ல வலுத்த சொத்து இருக்கு. ரெண்டு பயலுவளும் நல்ல செவப்பா இருப்பானுவ. ஆனா கிராமம். நம்ம சுநந்தாவும், ஜோதியும் கொஞ்சம் அடக்க ஒடுக்கமா போய் இருக்கணும். அதுதான் இருக்கமாட்டாளுவ. ரெண்டும் தலெ தெறிக்க ஆடும். அவனுவப்பட்டைய கௌப்புனாதான் ஒழுங்கு வரும்.

பாக்கி ரெண்டு போட்டோவும் ஏர்லைன்ஸ்ல வேலெ பாக்குற பயலுவோ. எல்லாம் பேசி முடிச்சாச்சு. எவளாவுது மூச்சு கீச்சு பறிஞ்சியோ அங்கேயே கிளிச்சி மாட்டிப்புடுவேன் மாட்டி!''

''ஹய்யா! அப்ப நாந்தான் மிச்சமா? ரொம்ப ஜோர்! நான் மாமாவுக்கு! மாமா போட்டோவை நான் மொதல்லெயே எடுத்து பெட்டியில வச்சுருக்கேனே'' என்று குந்தினாள் விஜயா.

அப்பறம் அங்கே நடந்தது ஒரு சின்ன கூச்சல்தான். சந்தைக்கடை எரைச்சல்தான்! போட்டோக்கள் கைமாறுவதும், பெண்களின் கண்களில் வயிரம் ஜொலிப்பதுமாய் ஒரே அழுகையும், எரிச்சலும், மொரலலும், கூச்சலும் வீடே திமிலோகப்பட்டது.

எப்பவுமே கலியராஜன் கொஞ்சம் அமத்தலான ஆள். எல்லாப் பெண்களுமே அழுவதற்குக் காரணம் அவன் சொன்னதைச் செய்வான்! சொல்லவே மாட்டான், சொன்னால் மீறவே முடியாது! அப்டித்தான் பதினெட்டு, இருபது வருஷமாய் முதலை மாதிரி கொண்டது விடாமல் அந்த வீட்டையே வளைத்துப் பிடித்து இருந்தான். பிடிவாதம், ஆங்காரம், முரடு எல்லாவற்றுக்கும் பேர்போன பெண்கள் மதுரம்பாளின் பெண்கள்!

ஆனால், எவளானாலும் சரி, கலியராஜன் குரல் கேட்டால் போதும் எல்லாம் ஓடி பாடப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொள்ளும். இத்தனைக்கும் அவன் ஒன்றும் கேட்க மாட்டான்!

''என்ன படிக்கிறே? என்ன மார்க்?'' எதுவும் கேட்டதில்லை.

''ஏன் விளயைாடுறே? ஏன் தூங்கலெ? ஏன் படிக்கலெ?'' ஆனா திடீர்ன்னு ஒரு நாளு ''ராஜலெஷ்மி இங்கே வா. ரொம்ப நாளாச்சே ஒன்னெக் கேட்டு என்ன பண்ணிட்டு இருக்கே? ஒழுங்கா படிக்கிறியா? ஒன் இங்கிலீஷ் புக்கை எடுத்துக்கிட்டு வா ரூம்க்கு!''

மாடி ரூம்க்குள்ள போயி ராஜலெஷ்மி வெளியே வர ரொம்ப நேரமாகும். எல்லாக் குட்டிகளும் அந்த ரூம் வாசல்லெயே காத்துக் கெடப்பாங்க. ரிசல்ட் வாங்குற மாதிரிதான்! அழுது மூஞ்சி வீங்கி ராஜலெஷ்மி வெளிய வரும்! கீழ வந்து உடனே மதுரம்பா கேக்கும்-

''வெக்கங்கெட்டுப் போயி அவங்கிட்ட அடி வாங்கிக்கிட்டு வர்றியேடீ எம் பொண்ணா நீ, மானம் வெக்கம் இருக்கா, நீ வடிவேலு மொவளா? இப்டி ஒதத் தின்னுட்டு வர்றீயே? ஒடம்புல திங்கற சோறு ஒட்டுதா ஒனக்கு? ஏண்டா எம் புள்ளைங்கள அடிக்கிறேன்னு கேக்கறதுக்கு எனக்கு வகை வைக்கிறீங்களா? அதுக்கும் நாதியில்லாமெ விட்டுவிட்டு பொய்ட்டான் அந்த ஆளு!

ஏண்டீ! படிக்கிறதைத் தவிர என்னாடி ஒனக்கு வேலை? எங்க அடிச்சான் இங்கே வா பாக்கலாம்? கன்னிக்கின்னி போயிருக்கா?'' என்று உடம்பை பரிசோதிப்பாள் மதுரம்பா. ராஜலெஷ்மி பதிலே சொல்லாமல் அழுது கொண்டேயிருப்பாள்!

அந்த மாடி அறை கோர்ட்ல கலியராஜன் கூப்ட்டு விசாரிக்கிறதோட சரி! யாரு மேலேயும் கை வக்ய மாட்டேன்; கை வச்சதே இல்லெ! ஆனா சாப்டலேன்னா அடிப்பான்! தூங்கலேன்னா அடிப்பான்! சொன்னதை கேட்கலேன்னா அடி. சொல்லப்போனா கண்டிப்புக்காக அடிப்பான்! இதுவும் எல்லாக் குட்டிவளுக்கும் தெரியும்! மதுரம்பாளுக்கும் தெரியும்!

ஆனாலும் அந்த ரூமுக்குள்ளே கொண்டு போயி ஏன்னதான் கண்டிப்பானோ? என்னதான் சொல்லுவானோ யாருக்கும் தெரியாது! ஒருத்திக்கு ஒருத்தி சொல்லிக்கக் கூட மாட்டாளுவோ! அடுத்த திருப்பு பரீட்சையில யாரும் சொல்லவே வேண்டியதில்லெ. தானா மந்திரம் செஞ்ச மாதிரி எல்லாப் பாடத்துலயும் மொதல் மொதல்ன்னு குட்டிகள் வரும்! மதுரம்பா சமையலறையை விட்டு வராது! ஆனா மார்க் ஷீட்டைப் பார்த்த ஒடனேயே கண்ணுலருந்து குபுகுபுன்னு தண்ணி அருவியில வர்றது மாதிரி கொட்டும்! அவன் எதிர்கால வந்து நிக்கிற மாதிரி மதுரம்பா உடம்பெல்லாம் நடுங்கும்! புள்ளைய பெத்துப்போட்டா ஆச்சா?!

''ஏண்டீ மதுரம்பா பதினாறு மொழ சுத்துப் பொடவெ கட்டிக்கிட்டு அடுப்படியிலேயே ராஜ்யபாரம் பண்ணிக் கிட்டிருக்கிறதா நெனப்பா? மிதிச்சன்னா தெரியுமா? பத்துப் பொண்ணையும் மனுசியாக்கி உட்ருக்கேன் பாத்துக்க, ஒண்ணு ஒண்ணும் எட்டு ஊரெக் கட்டியாளும் தெரியும்ல்லெ!''

'' ஆனா நீ ஏமாத்திட்டு போலாம்ன்னு மாத்திரம் நெனைக்காதே! நான் ஒங்க யாருக்கும் புடிக்காதவனா இருக்கலாம். துமுறுன்னா வீச்சருவாளெ எடுத்தா ஒரே போடுதான்!'' அவன் குமுறி கர்ஜிப்பதுபோல் சமையல் உள்ளுக்குள் அவன் காலடியில் நெடுஞ்சாண் கிடையாக விழுவது போல் கதறிக் கொண்டு கீழே விழுந்து புரளுவாள் மதுரம்பா!

ஒரு ஒருத்தி கையில ஒரு ஒரு போட்டோ; மனது பூரா ஊத்தி நெரப்பி பாலா வழிய விட்டுட்டான் கலியராஜன்! இப்படி செய்வான்னு யாருமே நெனைக்கலெ! தர்முவும் சுநந்தாவும் மாடியில அவன் அறையில் இன்னும் அழுது கொண்டு குப்புறக் கிடந்தார்கள். ஏனென்றுதான் தெரியவில்லை. வீடு பூராவும் ஒரே அமைதி! லலிதா முழங்காலைக் கட்டிக் கொண்டு சமையல் உள்ளில் அம்மாவுடன் உட்கார்ந்து ஒருவரையொருவர் கட்டிப் பிடித்து மூச்சுப் பேச்சில்லாத அமைதியில் ஆழ்ந்து கிடந்தார்கள்.

வாசலில் அலமேலு, ராணி, காமாட்சி, தம்பி ராஜூ நாலு குழந்தைகளும் கோடை கால விடுமுறையை வீணாக்காமல் கொதிக்கிற புழுதியில் பிள்ளையார் பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்! ஏகக் கூச்சல்! தெருவே ரெண்டுபடும் போல் இருந்தது. சாதாரண நாளாய் இருந்தால் எல்லாம் அடங்கி வீட்டுக்குள் இருக்கும்! கலியராஜன் இனிமேல் சாயங்காலம்தான் வருவான்.

வீட்டில் இருக்கிற அக்காமார்கள் எல்லாம் கல்யாணச் சந்தையில் விலையாகிப் போய்விட்டது அந்தக் குழந்தைகளுக்குக் கூட நன்றாய்த் தெரிந்திருந்தது! அதனால் கூச்சல் ஜாஸ்தியாகவே இருந்தது!

தர்மு கல்யாணத்தை மட்டும்தான் அந்தக் குழந்தைகள் எதிர்பார்த்திருந்தன! ஒரே நேரத்தில் ஆறு கல்யாணம் என்றால் எவ்ளோ பலகாரம்! எவ்வளவு சொந்தக்காரங்க, உறவுக்காரங்க விளையாட்டு! சந்தோஷம்! கும்மாளம்! அடேயப்பா! என்று குழந்தைகள் மாய்ந்து போனார்கள்!

''இருந்திருந்து கடேசில மாமென் இப்டி காலை விரிக்கும் அப்டின்னு தெரியாமெப் போச்சே!'' என்றாள் சுநந்தா தர்முவின் காதுகளில்.

''அப்டியெல்லாம் சொல்லாதே; மாமனெ மாதிரி ஒரு ஆளு எங்குமே இருக்காது! எது செஞ்சாலும் அது நமக்கு நல்லதுதான் செய்யும்! நாங்கூட ஏமாந்துதான் போய்ட்டேன். எல்லாருக்கும் ஆசை இருக்கு தாசில் பண்ண? அதிஷ்ட்டம் இருக்கு கழுதெ மேய்க்க! அது செய்ய வேண்டிய வேலையெல்லாம் செய்யாமெ எப்போதும் பின் வாங்காது தெரியும்லெ!'' என்று சொல்லிய தர்முவின் கண்களிலும் கண்ணீர்!

''எனக்கு இந்த மாப்ளெயெப் பிடிக்கலேன்னா என்ன பண்ணிபுடுமாம் இந்த மாமென்?'' என்று ஆக்ரோஷத்துடன் விழி சிவந்தாள் சுநந்தா. அலுப்புடன் சிரித்துக் கொண்டே ''இந்த ஆளெப் பிடிக்கலேன்னா உடனே வேறோருவனெ புடிச்சுக் கொண்டாந்து மாமங் கட்டி வெச்சுடும். அதுக்காகவெ ஒன்னெவுட்டு வச்சுடும்ன்னு நெனைக்காதே! ஏண்டி ஒம் மாப்பிள்ளைக்கு என்ன கொறையாம்? பாக்க கண்ணுக்கு லட்சணமாயிருக்கான்! நெறைய

சொத்து இருக்கு! ஒரே வூட்டுக்கு நம்ம, வூட்டு புள்ளைவ ரெண்டு மருமவளா போறீங்க. இன்னும் என்னடீ வேணுங்குறே?

''மாமென் வேணும்!'' என்று சொல்லிக் கொண்டு அவள் தோள்களில் புரண்டு கொண்டாள் சுநந்தா! கண்களிலிருந்து கண்ணீர் தர்முவின் ஜாக்கெட் பூராவும் பரவியது.

அதே நேரத்தில் அவளுடைய விம்மலைக் கேட்டு சுநந்தாவும் அதிகமாகவே அழலானாள்.

''அப்ப கலியராஜன் யாரெத்தென் கலியாணம் பண்ணிக்குவான்?'' என்ற கேள்வி மட்டும் வெளிய சொல்லி கொள்ளவோ வெளிய கேட்டு கொள்ளவோ இல்லை. இந்த வீம்பு எல்லாருக்கும் இருந்தது. அது வடிவேலு வீட்டு சீதனம். பணியிறது, வளையிறது எல்லாம் ஒருத்தனுக்குதான்! ஆனா எனக்கு வேணும்ன்னு யாரும் அங்க கேக்க மாட்டாங்க! கேட்டதில்லெ!

கீழ வீடு முழுவதும் இதே வீம்பில் அடிமையாகி யாரும் வாய் தொறக்கவேயில்லை என்றாலும், மதுரம்பாளுக்கு மட்டும் நெஞ்சு வெடித்து விடும்போல் இருந்தது!

ராத்திரி நேரம் பண்ணண்டு, ஒன்று, இரண்டு என்று கூடத்து வால்கிளாக் மணி அடித்துக் கொண்டிருந்ததெல்லம் மதுரம்பாளுக்குத் தெரியும்! ஒரு வாரத்துக்குள்ளாகவே எல்லாப் பொண்டுவளுக்கும் பரிசம் போடப் போறன் கலியராஜன் கத்திப்புட்டு போனான்! ஒரு மரியாதைக்கு கூட அவகிட்ட வந்து சொல்லலெ! மதுரம்பா குப்புறப் படுத்து அழுது கொட்டினாள்! தலையணை இப்போது கலியராஜன் வெறுத்துப் போனான். அவர்கள் எல்லோரையும் ஒரே வழியாய் கலியராஜன் மறுத்துப்புட்டான்!

லலிதாவும் தூங்கவில்லை என்பது அவள் புரண்டு புரண்டு படுப்பதிலிருந்து தெரிகிறது. கலியராஜன் எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டதனால் இந்தக் குடும்பம் பதினஞ்சு வருஷத்துக்கு முன்னாலேயே தெளிந்துவிட்டது. வறுமை, சுருக்கமும் இல்லாமைக் கஷ்டமும் ஒரு மூணு வருஷம் இருந்தது என்னவோ உண்மை!

''இந்த ரெண்டு வண்டி நெல்லை அரைச்சுட்டு வர முடியுமா? தம்பி'' என்ற கேள்வியிலிருந்து அப்படியே அந்த வீட்டுப் பொறுப்பு எல்லாத்தையும் வரவு செலவு உட்பட யாரோட அனுமதியும் இல்லாமலேயே சவுக்கையும் எடுத்துட்டான். இப்ப ஐயோன்னா ஆவுமா? அம்மான்னா ஆவுமா? யாரோ கதவெத் தட்டுற சத்தம் கேட்டு திடுக்குன்னு ஏந்திரிச்சா மதுரம்பா! திக்குன்னுச்சு. இந்த நேரத்ல யாரு? ஆம்பளை இல்லாத வீடு! இதுக்குத் தான் ஆம்பளை வேணும்கிங்கிறது? என்னா செய்யிறதுன்னு தெரியமெ லலிதாவைத் திரும்பிப் பார்த்தா. அவளோ கொடி துவண்டு கெடக்குற மாதிரி கெடக்குறா! வெச்ச கண்ணெ எடுக்க முடியலெ!

இவளுக்கு வேண்டாம்ல்லெ! அப்படியே வாழைத் தண்டு வளைஞ்சு கெடக்குற மாதிரி பொரண்டு கெடக்குறாளே...

மறுபடியும் கதவெத் தட்டுற சத்தம்!

மெதுவா எழுந்து பட்டகசாலை வழியாக மங்குன இருட்டு வெளிச்சத்துலெ விழ வெளக்கு எரிஞ்சுட்டு இருக்குற கண்ணாடியப் பாத்துக்கிட்டே வாசலுக்குப் போறா மதுரம்பா!

யாராயிருக்கும்? இந்த அகால வேளையில் போற போக்குல பீரோவை பார்த்தா ஒரே ஒரு கணம்தான். அப்படியே லலிதாக்குட்டி மாதிரியே இருக்கு! எங்கேயும் ஒடம்புல ஒரு துளி சதை கூட இல்லெ! அசிங்கமோ விகாரமோ இல்லெ! முப்பது வருஷத்துக்கு முந்தி இருந்த மாதிரியே இருக்கா மதுரம்பா! திக்குன்னுது மறுபடியும். வாசல் கதவுக்கு ரெண்டு பக்கத்துலயும் ஜன்னல்! ஒரு ஜன்னல் நாதாங்கியத் தள்ளி லேசா கதவெ ஒருக்களிச்சு.

''யாரு?''

''நாந்தான் கலியராஜன்! கதவெத்தெறெ?''

''புள்ளைங்கள்லாம் தூங்கிட்டாங்களே?

''நான் உள்ள வர்லெ! நீ வெளியே வா அத்தை பயப்பட வேண்டாம்! கொஞ்சம் பேசணும். இப்டி இருட்டுல திண்ணையில உக்காந்து கேட்டாப் போதும்!''

அப்படியே தொண்டைக்கு மேல் பேச்சே வரவில்லை அவளுக்கு! வாசலடியில் நின்றான் கலியராஜன்! எப்போது கதவைத் திறந்தாள் என்று அவளுக்குத் தெரியாது.

''என்னத்துக்கு வந்துருக்கான் இவன்? இந்த நேரத்துலெ?'' என்றாள். அவன் பக்கத்திலிருந்து புளித்த பலாப் பழத்தின் வாசனை!

அப்ப! எதுக்கு குடிச்சிட்டு இங்க வந்திருக்கான்? உங்க வீடு வெளிச்சத்தில் கலியராஜனின் கண்கள் சிவந்து முன் தள்ளி உருண்டன! அவளுக்கு நடுக்கம் ஜாஸ்த்தியாயிடுச்சு. கலியராஜன் குடிப்பது முன்பே அவளுக்குத் தெரியும்! எப்போதும் குடிக்கிறவன் அல்ல. ஆனால் நன்றாகவே குடிக்கிறவன்! குடித்தாலும் ரொம்ப நெருங்கிப் பார்த்தால்தான் தெரியும்.

அத்தைன்னு கூப்ட்டதே இல்லெ! ராத்திரில வந்ததே இல்லெ! இப்பக் குடிச்சுப்புட்டு அத்தையாமே! அத்தை! ஒருத்தியெக் கட்டிக்கிட்டு அத்தைன்னு கூப்டக் கூடாதா? அதான் இல்லென்னு போச்சே. அதற்குள் தப்புதான் அவங்கிட்ட இப்டி பேசுறது தப்புதான்!

''எல்லாரும் சேந்து என்னை ஏமுத்தீட்டிங்களேடீ? பாவிங்களா? சுத்தி வளைக்கிறதுல என்ன இருக்கு! ஒருத்தியாவது புரிஞ்சுக்கிட்டீங்களா? ஒங்களுக்கெல்லாம் நான் ஒரு ஆம்பளை அவ்வளவுதான்! ஜாக்ரதையா பழகுவீங்க. ஒழுங்கா இருப்பீங்க, கெப்புறு விடாம அப்படியே ஜாக்ரதையா, சுத்தமா, நேர்மையா ஒவ்வொருத்தியும் இருப்பீங்க. நான் ஒங்களுக்கு ஒரு காவல்காரன்! பாதுகாவல்! அவ்வளவுதான் என்னைக்காவது ஒரு நாள் கொஞ்சம் ஒரு மாதிரியா இருந்திருந்தேன்னா அப்ப தெரிஞ்சுருக்கும் நீங்கள்ளாம் யாருன்னு!''

''என்னப் பேச்சு பேசுறப்பா தம்பீ! இப்பக்கூட என்ன கெட்டுப் போச்சு! ஏம் பொண்ணுல யார வேணுன்னாலும் நீ கட்டிக்க! ஆசெப்பட்டா ஒவ்வொருத்தியும் தயாராதான் இருக்கா!'' கொஞ்சம் சத்தம் போட்டே சிரித்தான் அவள் சொன்னதற்கு. மதுரம்பா திகைத்தாள்.

'என்ன சொல்றான் இவன்?' ஒடம்பு ரத்தம் முழுசும் அப்படியே நெஞ்சுக்குள் பாய்வதுபோல் இருந்தது. தெரு பூராவும் வெறிச்சோடிக் கிடந்தது! நாக்கு மேலே ஒட்டிக் கொண்டது. உடம்பு முழுதும் அனல் பறந்தது. நெஞ்சு வலி ஆரம்பித்து குத்து ஆரம்பித்தது.

''எங்க வீட்லயும் எனக்கு யாருமில்லேன்னாலும் இந்த வீட்லயும் எனக்கு யாருமில்லே. நான் ஏன் இந்த வீட்டுக்குள்ள வந்து நொழைஞ்சு ஒரு எடுபிடி ஆளா ஆண்டெ ஆண்டென்னு கையேந்திக்கிட்டு நிக்கிறேன் எனக்கே தெரியிலே!''

''ஐய்யோ அப்படியெல்லாம் சொல்லாதீங்க தம்பீ! நீங்க இல்லேன்னா இந்த வீடே முச்சந்திக்கு வந்திருக்கும்.''

''அதெல்லாம் பேசாதே! ஒங்க நன்றி, விசுவாசம், அன்பு, பக்தி, பாசம், நேசம், எல்லாத்தையும் நான் பிச்சை கேட்க வர்லெ! ஒங்களுக்கும் எனக்கும் என்னடீ சம்பந்தம்? ஏய்... ஒன்னெத் தான்டீ கேக்குறேன்?''

''தம்பி அண்ட அசல்லெ எல்லாம் ஆள் தூங்குது; நம்ம திண்ணையிலிலேயே ஆளுவ தூங்குறானுவோ? எல்லாரும் காதுல வுளுந்து ஏந்திரிச்சானுவன்னா குண்டக்க மண்டக்க ஆயிடும்! நீங்க குடிச்சிருக்கீங்க; வேண்டாத பேச்சுப் பேச வாண்டாம். காலையில வாங்க'' என்று பொடவையை இழுத்து சொருவிக் கொண்டு உள்ளே போக எத்தனித்தாள்.

''ஏய்...ய்...ய் நில்லுடீ! ரொம்ப ஒழுங்கு மாதிரி உள்ற போயிக் கதவெ சாத்திக்கலாம்ன்னு பாக்குறியா? ஒனக்குத் தெரியாதா? நான் ஒங்காலெ சுத்திக்கிட்டு இருக்கேன்னு. பொய் சொல்லாமெ சொல்லு; ஒன் நெஞ்சுல கை வெச்சு சொல்லு; நான் ஏன் இந்த வீட்டெ சுத்திச் சுத்தி நாய் மாதிரி வர்றேன்னு ஒனக்குத் தெரியாதா? இருவது வருஷமா ஏம் மூஞ்சியெக்கூட நீ வந்து பார்த்தது இல்லெ! நான் அதுக்குத்தான் அலையிறேன்னு ஒனக்கு நல்லாத் தெரியும்!''

திகிலோடு சுற்றுமுற்றும் பார்த்தாள் மதுரம்பா! ஓடிப்போய் அவன் காலடியில் விழ வேண்டும் என்று 'உடம்பு பறந்தது அவளுக்கு!' ''என்ன மன்னிச்சுருங்க மன்னிச்சுருங்க''ன்னு அலறணும்ன்னு நெஞ்சுக்குள்ள ரத்தம் அலையடிக்கிது! பயம்! பயம்! பயம்! பூதம் பயம்! இருவது வருஷமா இருந்த பயம், பத்துப் பொண்ணுவளெ பெத்த பயம்!

ஒவ்வொரு வருஷமும் வர்ற புது ஆம்பளையா வடிவேலுவப் பாத்த பயம்! பட்டாளத்துலருந்து ஒரு மாச லீவுல வந்து வருஷம் ஒரு பொண்ணா பெத்த பயம்! ஆம்பளையா அவளுக்கு ஒறவு பத்துநாள்தான்! அந்த பயம்! மொரட்டுப் பிசாசா அவளெ பய முறுத்திக்கிட்டே இருந்த கலியராஜன்மேல் பயம்! அப்படியே அவன் கால்களில் விழுந்தாள் மதுரம்பா.

''ஏங்குடும்பத்தெ அழிச்சுடாதெய்யா! பட்டினி கெடந்து பட்டினி கெடந்து அழிச்சுத் தரையோட தேய்ச்சது இப்ப வெட்ட வெட்ட வளருது! வானதறுதிக்கு மொளச்சலிங்கமா ஏந்திரிச்சு நிக்கிது! என்ன வுட்டுடு! ஏஞ்சாமி என்னெ வுட்டுடு! ஏம் பொண்ணுவளெக் காப்பாத்து! நானு ஒனக்கு அருகதையில்லெ! காடுவா வாங்குது! எம் பொண்ணுவ ஒருத்திக்குத் தெரிஞ்சாக்கூட போதும், எல்லாம் நாண்டுக்கிட்டு சாவும்! இந்தக் குடும்பத்தை சுடுகாடாக்கிப் புடாதெ!'' அவன் கால்களைக் கட்டிப் பயந்து பயந்து சுத்திமுத்திப் பார்த்துக் கொண்டே அழுதாள்.

''ஏய்...ய்... யாருகிட்டடீ கதெவுடுறே! ஒன்னோடய அழுவெ, பொருமலு, ஒழுங்கு முத்துன வாழைக்காத்தனம் எல்லாம் ஏங்கிட்டெ நடக்காது? ஒரு வருஷமா? இரண்டு வருஷமா? இருவது வருஷம்டீ இருவது வருஷம். ஒரு நாளு நான் பாக்க நல்ல துணி கட்டியிருப்பாயா? நாயே! ஒரு நாளு ஏம் மொகத்தெ நிமுந்து பாத்துருப்பியா? நான் இருந்தா முத்தத்துக்கே வர்றதில்லெ! அடேயப்பா! நளாயினி, சாவித்திரி கறுப்பு, நெஞ்சுல ஆசெயெ வச்சுக்கிட்டு தானடீ வூட்டுக்குள்ள ஒளிஞ்சுக்கிட்டிருந்தே! ஒன்ன எனக்கும், என்னெ ஒனக்கும் இந்த வூட்டுக்குள் பூந்துக்கிறதுக்கு முன்னாடியே தெரியும்! ராஸ்கோல்! ராஸ்கோல்! எனக்கு ஊருல பொண்ணா இல்லே? அத்தெ மொவ இல்லையா? மாமென்மொவ இல்லையா? முண்டச்சின்னு ஒன்னெத் தெரியாதா எனக்கு? முண்டச்சின்னு தெரியாமயா பின்னால வந்தேன்? ஏய்...ய்... ஒன்னெ சும்மா வுட்ருவேன்னு மட்டும் நினைக்காதே! நான் என்ன பொருக்கியப் பயலா? போக்கனங்கெட்டப் பயலா!அவுசப் பயலா? வூட்டுக்குள்ள படுத்துருக்கிறது அத்தனையும் ஏம் பொண்ணு வடீ! ஏம் பொண்ணுவ! பெத்தாதானா? நீ பூ வச்சுக்காம, பொட்டு வச்சுக்காமெ வேஷம் கட்டுனா கொளத்தாங்கரையிலேயும், ஆத்தங்கரையிலேயும் நீ சிரிச்ச சிரிப்பெ எவன்டி வந்து தெரிஞ்சுக்கப் போறான்! நீ குடும்புடுற சாமியும், நாங் கும்புடுற சாமியும் ஒண்ணுன்னு ஒனக்கும், எனக்கும் மட்டுந்தான்டீ தெரியும்!

நீ போடுற தாலியறுத்த வேஷம் ஊருக்கும், ஒலகத்துக்கும் ஒம் பொண்ணுவளுக்குத்தான்! என்னெ வாசல்லெ பாத்தா கொல்லப்பக்கம் போயிடுறது; கொல்லப்பக்கத்துல பாத்தா வாசலுக்குப் பாஞ்சிறது. நட்ட நடு வூட்ல பாத்தா அடுப்பாங்கரைப் பொந்துக்குள்ளப் பூந்துகிறது. அத்தனைக்கி நான் இளிச்சவா பய இல்லையாடி'' ...படார்...படா...ர் என்று மார்பில் அறைந்து கொண்டான்!

''நான் ஒரு போக்கனங்கெட்டன்; ஒங்கிட்ட வந்து இதெல்லாம் சொல்றேன்! பாரு திருட்டு முண்டெ! 'சுவற்றில் போய்' மடேர் மடேர்' என்று மோதிக் கொண்டான் கலியராஜன்!

''அய்யோ வாண்டாம்; வாண்டாம் யாராவது வரப்போறாங்களே? யாராவது கேக்கப் போறாங்களே! யாராவது கேக்கப்போறாங்களே!'' என்று கதறினாள் மதுரம்பா.

''ஏய்... இனிமே நடிச்சே இதே எடத்துல கொன்னுபுடுவேன். நானே பயலுவள எழுப்பி வுட்டு செருப்பால் அடிக்கச் சொல்லுவேன். இருவது வருஷமாச்சு. இனிமே ஆக்ட் கொடுத்தே... ஒன்னே இதே எடத்துல'' என்று கூறியபடியே அவளைப் பொடவையோடு சேர்த்துப் பிடித்து நெருக்கி வீட்டுக்குள்ளே ஒரு துணி மூட்டையை எறிவது போல் ஆத்திரத்தோடு விட்டெறிந்தான் கலியராஜன். கூடத்துக் கருங்கல் தூணில் மோதி வெட்டிய மரம்போல் விழுந்தாள் மதுரம்பா!

கைகளை ஓங்கிக் கொண்டு வாசலிலேயே நின்றான். ஒரு கணம் பாய்ந்து அவளை எட்டி மிதித்தே கொன்றுவிடுவது என்பது போன்ற நிலையில் காலை மேலே உயர்த்தித் தூக்கியபடி...

''உண்மையைச் சொல்லுடீ என்னெ நீ மனசுக்குள்ள வச்சே ஏமாத்ததிலே? வேஷம் போடலெ! என்னெ நினைக்கவே இல்லையா? நெஜமா சொல்லு'' ... என்று அவன் அலறியபோது, வாசலில் குறட்டில் படுத்திருந்தவர்களில் பாதிப்பேர் எழுந்து ஓடி வந்து,

''அய்யோ ஆண்டெ! வேண்டா ஆண்டெ வந்துருங்க! விட்ருங்க!'' என்று பதறியபடியே அவனை இடுப்பிலும், கைகளிலும் பிடித்துப் பின்னுக்கிழுக்க...

''இந்த அழுவெ செறுக்கி ஒங்களுக்கு வாண்டாம் வாண்டாம்!'' என்று முற்றத்தில் விழுந்து கதறியபடியே,

''என்னே மன்னிச்சுருங்க! என்னெ மன்னிச்சுருங்க! நான் பாவி! நான் பாவி! நீங்க சொன்னதெல்லாம் உண்மைதான்! இந்தப் போக்கத்த செறுக்கி ஒங்களுக்கு வாண்டாம்! இந்த நாதியத்த நாயி ஏங்கொல தெய்வத்துக்கு வாண்டாம்!'' என்று கதறியபடியே முற்றத்து மண்ணில் புரண்டு அழுதாள் மதுரம்பா. தூங்கிக் கொண்டிருந்த குழந்தைகள், பெண்கள் எல்லாம் குய்யோ முறையோ என்று கதறிக் கொண்டு, மதுரம்பாளைக் கட்டிக் கொண்டு கதறின! என்ன விஷயமென்று தெரியாமலேயே ராஜலெட்சுமி, ஜோதி, தர்மு, எல்லோரும் தாயின் கால்களைக் கட்டிக் கொண்டு கதறும்போது ஓரளவுக்கு விஷயம் தெரிந்தே லலிதா, சுநந்தா, நாகலட்சுமி ஆகிய மூன்று பெண்களும் தாயின் முதுகையும், இடுப்பையும் கட்டிக் கொண்டு கலங்கினார்கள்! புரியாவிட்டால்தான் என்ன? கண்ணீர் போதாதா?...

(புதிய பார்வை - அக்டோபர் 93)

